உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

ர் 40 )( துன்மதி ஆண்டு வைகாசித்திங்கள் 10—6—81 )( இதழ

மையாதீன முதற்குரவர்

குருபூஜைவிழா

டினப்பிரவேசத்

திருநாளில்

ஸ்ரீலஸ்ரீ

குருமகாசந்நிதானம்

அவர்கள்,

கொலுக்காட்சியில்

வழிபாடாற்றிய

திருப்பனந்தாள்

ஸ்ரீ காசிமடம்

ஸ்ரீமத். காசிவாசி

முத்துக்குமாரசுவாமித்

தம்பிரான்

சுவாமிகளுக்குப்

பொன்னுடைபோர்த்தி

ஆசியருளல்

25—5—81



தருமையாதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

# "ஞானசம்பந்தம்"

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 40 | 10-6-81 | இதழ் 7

## உட்பொருள்

எண் பக்கம்



உ

குருபாதம்

### ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு

—[★]—

ஈண்டுமெனை ஆண்டிலையேல்
என்வினைக்கீ டாயானே
வேண்டும் பவங்களில்நீ
விட்டாலும் — பூண்டருளால்
அங்கங்கே என்னே
டனனியமாய் என்னுருவில்
தங்கியருள் சொக்கநா தா.

— சொக்கநாத வெண்பா. 77

ஆசிரியர் :-
வித்துவான்
இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள்

துணையாசிரியர் :-
மகாவித்துவான்
சி. அருணைவடிவேல் முதலியார்

ஆண்டுச் சந்தா உள்நாடு ரூ. 10
ஆண்டுச் சந்தா சிலோன் ரூ. 12
ஆண்டுச்சந்தாவெளிநாடு ரூ. 18
ஆயுள் சந்தா உள்நாடு ரூ. 100
ஆயுள் சந்தா வெளிநாடு ரூ, 125

உ
குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 40 | துன்மதி - வைகாசி - 10—6—81 | இதழ் 7

திருச்சிற்றம்பலம்

பொன்தயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்தயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினாய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. — சம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்

# இந்து, இஸ்லாமியச் சகோதரர்களுக்கு
## : வேண்டுகோள் :

**இந்துக்களின் கடமை :**

நெல்லை மாவட்டம், தென்காசிக்கு ஐந்து கிலோமீட்டர் தூரத்தில் இருக்கும் 'மீனாட்சிபுரம்' என்ற சிற்றூரைப்பற்றிச் சிலமாதங்களுக்கு முன்வரை பலரும் அறியமாட்டார்கள். ஆனால் கடந்த மூன்று மாதங்களுக்குள் இந்த ஊரின்பெயர் இந்தியநாடு முழுவதும் அறிமுகமாகிவிட்டது. இதற்குக் காரணம் இச்சிற்றூரில் வாழ்ந்திருந்த இந்து மதத்தைச்சார்ந்த 945 அரிசனங்களில் 558 பேர் ஒட்டுமொத்தமாக இஸ்லாம் மதத்தில் இணைந்துவிட்டதாக வெளியான செய்தியேயாகும். இச்செய்தி இந்துமதத்தில் பற்றுக்கொண்டுள்ள இலட்சோப லட்சம் மக்களுக்குப் பேரதிர்ச்சியினையும் பெருவியப்பினையும் உண்டாக்கியிருக்கிறது. இந்த ஒட்டுமொத்தமான மதமாற்றம் திட்டமிட்டசெயலா? மனமாற்றத்தால் விளைந்ததா? என்பதை ஆராயவேண்டிய கடமையும், பொறுப்பும் ஒவ்வொரு இந்துவுக்கும் உரியது.

## எப்படி நடந்தது :

பத்திரிக்கைச் செய்திகளை ஒன்றுதிரட்டிப் பார்க்கும்போது மீனாட்சிபுரம் மதமாற்றத்திற்கு ஜாதிக்கொடுமையே காரணம் என்பது தெளிவாகிறது. தினமலர் நாளேட்டில் மே 25 இல் முதல் பக்கத்தில் வெளியான செய்தி ஒன்று இதனைப் பெரிதும் வலியுறுத்துகின்றது. மத்திய உள்துறை இலாகா தாழ்த்தபட்ட மற்றும் பழங்குடி மக்கள் நல இயக்குநர் திரு. கே. ஆறுமுகம் அவர்கள் மேற்கொண்ட நேரடி விசாரணை மூலம் ஜாதிக் கொடுமையே இம்மத மாற்றத்திற்கு அடித்தளம் என நன்கு விளங்குகிறது. மீனாட்சிபுரத்தினை அடுத்த மேக்கரை என்ற சிற்றூரில் தேவர்குலத்தைச் சார்ந்தவர்கள் இருவர் கொலை செய்யப்பட்டனர். இக்கொலையைத் தொடர்ந்து காவல்துறை யினரின் துணையோடு தேவர்வகுப்பினர் அரிசனங்களுக்குச் சொல்லொணாத் துயர்விளைத்தனர். மீனாட்சிபுரத்தை அடுத்து விளங்கும் பண்பொலி என்ற கிராமத்துத் தேவர்வகுப்பினர் களைவிட, கல்வி மற்றும் செல்வநிலையில் அரிசனங்கள் மேலோங்கி இருந்தனர். இதுவும் அரிசனங்களைக் கொடுமை செய்யக் காரணமாயிற்று. மதமாற்றத்துக்கு முன்னாக இது தொடர்பாகப் பல்வேறு நிகழ்ச்சிகள் பகைவளருமாறு நிகழ்ந் துள்ளன. இவற்றாலெல்லாம் பாதிக்கப்பட்ட அரிசனங்கள் சார்பில் ஸ்ரீவில்லிபுத்தூரில் லோகல் பண்ட் ஆடிட்டராக வேலைபார்க்கும் அரிசனவகுப்பைச்சேர்ந்த ஒருவர் திருநெல் வேலி இஸ்லாமிய சங்கத்துக்குச் சென்று தாங்கள் ஒட்டு மொத்தமாக இஸ்லாம்மதத்திற்கு மாறவிரும்புவதாகக் கூறினார். இஸ்லாமியசங்கம் உடன்பட்டு 1981 பிப்ரவரி 19 இல் மீனாட்சி புரத்தில் அரிசனங்களோடு ஒரு சமபந்தி போசனத்திற்கு ஏற்பாடுசெய்தது. ஏராளமான இஸ்லாமியர்கள் இதில்பங்கேற் றனர். இதன்பின் கிராமமக்களில் 558 அரிசனங்கள் புதிய பெயரோடு இஸ்லாம் மதத்திற்கு மாறிவிட்டனர். இன்னும் 387 அரிசனங்கள் இந்துக்களாகவே வாழ்ந்துவருகின்றனர் என செங்கோட்டைத் தாலுக்கா அதிகாரியின் அறிக்கையிலிருந்து தெரியவருகிறது. 1969ஆம் ஆண்டிலிருந்து இதுவரை இப் பகுதியில் 8000 இந்துக்கள் இஸ்லாமிய மதத்தைத் தழுவி யுள்ளதாகத் தகவல்கள் கிடைத்துள்ளன.

## இஸ்லாமியர் வளர்ச்சி :

இந்தியநாடு இந்துமதத்தை அடித்தளமாகக் கொண்ட பெருநாடு. கி. பி. 12 ஆம் நூற்றாண்டுக்குப்பின் வடநாட்டில் நிகழ்ந்த இஸ்லாமியப் படையெடுப்புக்களால், இஸ்லாம் மதம்

இந்நாட்டில் நுழைந்தது. வடநாட்டில் இந்து — முஸ்லீம் போராட்டம் பெருகியது. விடுதலைபெறும் வரையில் இது ஓய வில்லை. இந்தியநாடு இப்போராட்டத்தின் விளைவாகப் பாகிஸ்தான் எனத் துண்டாடப்பட்டது. விடுதலைக்குப்பின் இதேபோராட்டத்தின் எதிரொலியால் காந்தியடிகள்உயிர் பறிக் கப்பட்டது. சமயச்சார்பற்ற அரசுஎன்ற இந்தியஅரசின் பிரகட னத்திற்குப் பின்னர் இப்போராட்டம் ஓரளவுகுறைந்து நாட்டில் அமைதி நிலவிவந்தது. தென்னுட்டில்— குறிப்பாகத் தமிழ் நாட்டில் இந்துக்களும் இஸ்லாமியர்களும் மிகுந்த பிணைப் போடு சகோதரர்களாகவே இன்றுவரை பேதமின்றி வாழ்ந்து வருகிறுர்கள். மீனுட்சிபுரத்துச் சம்பவமும், இதனை அடுத்து மதுரை மாவட்டம் துறையூரில் நடந்துள்ள சம்பவமும் இந்த நீண்டகால அன்புக்கும் — பிணைப்புக்கும் — அமைதிக்கும் ஊறுவிளைத்துவிடுமோ என்ற அச்சம் அனைவர்க்கும் இயற்கை யாகவே எழுந்துள்ளது. இந்த மதமாற்றங்கள் திட்டமிட்ட ஒரு ஏற்பாடு என்றும், லண்டன் ஜெனீவா ஆகிய இடங்களை மையமாகக்கொண்டு ஒரு இயக்கம் மதமாற்றத்திற்காக வேலை செய்து வருகின்றது என்றும், இந்தியமக்களை இஸ்லாமியர்க ளாக மாற்றும்முயற்சியில் தமிழ்நாட்டை முதலில் பரிசோதனைக் களமாக இச்சக்திகள் கொண்டுள்ளன என்றும் ஒருசெய்தி **21—3—81** டைம்ஸ் - ஆப் - இந்தியாவில் வெளியாகியிருப்பது நமது அச்சத்தை மேலும் உறுதிப்படுத்துகின்றது.

## இஸ்லாமியர் யார் ?

இந்தியாவில் வாழும் இஸ்லாமியச் சகோதரர்களில் பெரும் பாலானவர்கள் — இந்து மதத்திலிருந்து சிலநூற்ருண்டுகளில் மதம் மாறியவர்களும் மாற்றப்பட்டவர்களுமேயாவர். குறிப் பாகத் தமிழகத்தில் வாழ்வோரில் 95 விழுக்காட்டினர் இந்து மதத்திலிருந்தவர்களேயாவர். கற்று, உணர்ந்து, இந்துமதத் தத்துவங்களைவிட — இஸ்லாமியத் தத்துவங்கள் சிறந்தன என்று தீர்மானித்து மனமாற்றத்தின்வழி மதமாற்றம் அடைபவர் களை யாரும்குறைகூறமாட்டார்கள். ஆனல் சாதிப்போராட்டங் களால் விளைந்த அச்சம், வறுமையால் விளைந்த தேவைகளின் நிறைவு, சில ஆசைவார்த்தைகளால் விளைந்த ஏமாற்றம் இவற்ருல் கல்வியறிவில்லாதவர்கள், அரிசனங்கள் ஒட்டு மொத்தமாக மதம் மாறுகிருர்கள் என்ருல் இதுபற்றி இந்து மதத்தினர் கவலைகொள்ளாதிருக்க இயலாது. மதமாற்றம் ஆன்ம ஈடேற்றத்திற்காகமட்டும் அமையமுடியுமேதவிர — சமூகக் காரணங்களுக்காக அமைய இயலாது என்பதனை அனைவரும் அறிந்து நடத்தல் நல்லது.

**இஸ்லாமியருக்கு :**

இஸ்லாமிய சகோதரர்களுக்கு ஒருவேண்டுகோள். இரண்டு குழுப்பினர்கள் தங்களுக்குள் கருத்து வேற்றுமை கொண்டு உங்களை அணுகும்போது, இயன்றவரை அவர்களுக்கு இடையேநிலவும் பகையைக்குறைத்து, அவர்கள் இணங்கிவாழ வழிவகை காணவேண்டுமே தவிர, அவர்களை — அவர்களே விரும்பினாலும் கூட — மதமாற்றமடைய நீங்கள் உதவுவது எவ்வகையிலும் அவர்களது நல்வாழ்வுக்கு உதவாது. இஸ்லாமியக் கோட்பாடுகளில் பற்றுக்கொண்டு வருவோரை நீங்கள் ஏற்றுக்கொள்வதில் எவ்வித மறுப்பும் எங்களுக்கு இல்லை. சைவ சமய வரலாற்றில் மனம்மாறிச் சமணத்திற்கு நாவுக்கரசர் சென்றபோது சைவம் அவரைத்தடுத்து நிறுத்த வில்லை. லட்சக்கணக்கான இந்துக்கள் இஸ்லாம் மதத்தில் விரும்பிச் சேர்ந்தபோது நாங்கள் ஆட்சேபிக்கவில்லை. இந்தமத மாற்ற முயற்சியால் இந்து சமயம் தாழ்ந்துபோய்விடும் என்ற அச்சத்தால் நாங்கள் இதனைக்கூறவில்லை. தமிழகத்தில் பலநூறு வருடங்களாக நிலவிவரும் இந்து — முஸ்லீம் ஒற்றுமைக்கு மீனாட்சிபுரங்கள் உலைவைத்துவிடுமோ என்ற அச்சங்கலந்த நல்லெண்ணத்தால் இதனைக் கூறுகின்றோம்.

**அரிஜனங்களுக்கு :**

அன்பார்ந்த அரிசனப் பெருங்குடி மக்களுக்கு ஒரு வேண்டுகோள் :- இந்துமதம் — குறிப்பாகச் சைவம் அரிசனங் களுக்கு இன்றுவரை உரிய சமுதாய அந்தஸ்தினை வழங்கியே வந்துள்ளது. திருக்கோயில்களிலும் அறநிலையங்களிலும் நீங்கள் வழிபட எவ்விதத்தடையும் இங்கே இல்லை. சமயம் எவ்வகையிலும் உங்கள் முன்னேற்றத்திற்குத் தடையாக இருந்ததில்லை. இனி இருக்கப்போவதும் இல்லை. எனவே, நீங்கள் வேறு சில இனத்தாரால் பாதிக்கப்பட்டதைக் காரணம் காட்டி இந்துசமயத்தைத் துறந்து இஸ்லாம் சமயத்தில் சார்வது எவ்வகையிலும் நியாயப்படுத்த இயலாததாகவே உள்ளது. இது நாட்டுவரலாற்றில் பெருங்களங்கமாகவே பேசப்பெறும். சாதி வேறுபாடுகள் — காவல்துறை கெடுபிடிகள் — அரசின் மெத்தனப்போக்கு இவற்றால் நீங்கள் பாதிக்கப்பட்டிருக்கலாம். ஆனால் அதற்கு இந்துமதம் எங்ஙனம் பொறுப்பாக இயலும். இடிந்தகரை மற்றும் தமிழகப் பகுதிகளில் இந்துமதத்தைவிட்டு இஸ்லாமியர்களாகவும், கிறித்தவர்களாகவும் மதம்மாறியவர் களில் பல்லாயிரவர் சமீபத்தில் மீண்டும் தாய்மதமாகிய இந்து மதத்திற்கே திரும்பியுள்ளனர். எனவே நீங்கள் உங்கள் மத மாற்றத்தை மறு பரிசீலனை செய்து மீண்டும் தாய்ச் சமயத் திற்கே திரும்பிவாருங்கள் என அன்போடு அழைக்கிறோம்.

### அரசினருக்கு :

அரசுக்கு ஒரு வேண்டுகோள்: சமயச் சார்பற்ற அரசு என்ற சட்டப் போர்வைக்குள் புகுந்துகொண்டு — சமய நம்பிக்கை அற்றவர்களாகி — யார் எங்கேபோனால் நமக்கு என்ன என்ற மெத்தனப்போக்கை அரசு கைவிடவேண்டும் என விரும்புகின்றோம். மதமாற்ற நிகழ்ச்சிகளின் தொடர்ச்சி — விரும்பத்தகாத சமுதாயப் பிரச்சனைகளைத் தோற்றுவிக்கும் என்பதனை அரசினர் உணர்வது நல்லது. சாதிவெறிக்கு மேலும் தூபம் போடுவதுபோல் நாட்டில் நிலவும் சாதிபற்றிய அமைப்புக்களை மெல்ல மெல்ல அகற்ற உதவுங்கள். சமூகத்தில் நடைபெறும் தேர்தல்களில் சாதி தலைமை தாங்காது இருக்க நடவடிக்கைகளில் ஈடுபடுங்கள். சாதியின் பெயரால் நடைபெறும் போராட்டங்களை ஆரம்பத்திலேயேகளையமுற்படுங்கள். காவல்துறையினரைக் கருணையோடு நடந்துகொள்ளுமாறு கண்காணித்துவையுங்கள். மீனாட்சிபுரம் சம்பவத்தால் இந்துமதம் பெறும் இழப்பைவிட வருங்காலத்தில் நாடு பெறும் இழப்பு பெரிது என்பதை உணர்ந்து செயல்படுங்கள் என்று வேண்டுகின்றோம்.

### இந்துக்களுக்கு :

இந்துமதத்தைத் தழுவி வாழும் மக்களுக்கும் ஒன்று கூற விரும்புகின்றோம். அரிசனமக்களுக்கும் பொருளதாரரீதியில் பின்தங்கியிருப்பவர்களுக்கும் உரியவாறு சமத்துவமும் உதவியும் வழங்கிவாழ நாம் தவறினால் ஆயிரக்கணக்கான நமது இந்து சகோதரர்களை நாம் இழந்துவிடநேரும் என்பதனை அனைவரும் சிந்திக்கவேண்டும். மீனாட்சிபுரம், நெடுநாட்களாக நாம் உறங்கிய உறக்கத்திற்குப்பின் நமக்கு ஏற்பட்டிருக்கும் அதிர்ச்சிமிக்க சவாலாகும். பாரம்பரியம் மிக்க நம்கோயில்கள் வழிபாட்டு உரிமை — சமயஞ்சார்ந்த நாகரிகம் — கலை — பண்பாடு யாவும் என்றும் அழியாது நின்று நிலவவேண்டும் என்பதிலே நாம் அனைவரும் விழிப்புணர்ச்சியோடு இருத்தல் அவசியமும் அவசரமும் ஆகிறது. ஒன்றுபட்டு உங்கள் அரிசன சகோதரர்களை உயர்த்துங்கள்; நீங்களும் உயர்ந்து வாழுங்கள்; பிறர் சொத்திற்கு ஆசைப்படாதீர்கள்; உங்கள் சொத்தையும் விட்டுவிடாதீர்கள்; இவ்வுணர்வுடன் வாழ்ந்து வழிகாட்டுவீர்களாக. இதேவேண்டுகோளை இஸ்லாமியர்களும் பின்பற்றி வாழ்ந்து வழிகாட்டுபார்களாக.

லோகாஸ் சமஸ்தாஸ் ஸுகினோ பவந்து.

ஆழ்க தீயது. வாழ்க உலகெலாம்.

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

26 ஆவது குருமகாசந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்**

**திருச்சிராப்பள்ளி வானொலி நிலையம் நிகழ்த்திவரும் குறள்நெறியில் "பிறவிப் பெருங்கடல்" என்ற குறள்பற்றி வழங்கிய**

# அருளுரை

12—9—1980

"ஆரியமும் செந்தமிழும் ஆராய்ந் ததனினிது
சீரியதென் றொன்றைச் செப்பரிதால் — ஆரியம்
வேதம்உடைத்து ; தமிழ்திரு வள்ளுவனார்
ஓது குறட்பா உடைத்து."

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர்; நீந்தார்
இறைவ னடிசேரா தார்."

எல்லா உயிர்களின் குறிக்கோளும் துன்ப நீக்கமும் இன்ப ஆக்கமுமேயாகும். ஆனால் எது துன்பம், எது இன்பம் என்பதை உயிர்கள் உணர்ந்துள்ளன என்று கூற முடியாது. எல்லாத் துன்பங்களுக்கும் அடிப்படையாக உள்ள துன்பம் பிறவித் துன்பமேயாகும். அதனால், இத்துன்பத்தை நீக்கிக்கொள்ளாமல் பிற துன்பங்களை நீக்க முயல்வது சிறப்புடையதாகாது. துன்பங்கள் எல்லாவற்றிலும் மிகமேலாயது பிறவித்துன்பமேயாய் இருத்தல் போல, எல்லா இன்பங்களிலும் மிகமேலாய இன்பம் வீட்டின்பமே ஆகும். அவ்வின்பம் நிலைத்தது; எல்லையற்றது.

பிறவித்துன்பமே பெருந்துன்பம் என்பதை விளக்கத் திருவள்ளுவர் - பிறவியைக் கடல் என்றும் - பெருங்கடல் என்றும் கூறுகின்றார். அப்பெருங்கடலில் உயிர்கள் இனிச் சென்று வீழப்போவதில்லை. முன்பே அதன்கண் அகப்பட்டுக் கரையேற மாட்டாது அலைகின்றன; அல்லல் அடைகின்றன. அறியாமை காரணமாக இத்துன்பத்தை அவை அறியவில்லை என்றாலும், அறிவுடையோர்கள் அதனை அறிந்து அக்கடலைக் கடந்து கரையேற வழியைத் தேடுகின்றனர். அவர்களுக்குத்

திருவள்ளுவர் கூறும் வழி இறைவனது திருவடியைப் பற்றுதல் ஒன்றேயாகும். அத்திருவடி பிறவி என்ற பெருங்கடலுக்குப் புணையாய் நின்று உயிர்களுக்கு உதவி, அவைகளைக் கரை யேற்றும். இக்கருத்தையும் திருவள்ளுவர் இறைவனது திருவடியைச் சேர்ந்தவர்கள் பிறவியாகிய பெரிய கடலைக் கடந்து கரையேறுவார்கள் என்று உடன்பாட்டில் கூறியதோடு அமையவில்லை. இறைவனுடைய திருவடியைச் சேராதவர்கள் பிறவிக்கடலைக் கடக்கமாட்டாது அதனுள்ளே அழுந்துவர் என எதிர்மறையிலும் குறிப்பிடுகின்றார்.

இதனால், பிறவியாகிய துன்ப நீக்கத்திற்கும், வீடுபேறாகிய இன்ப ஆக்கத்திற்கும் இறைவனுடைய திருவடியைத் தவிர உயிர்களுக்குப் பற்றுக் கோடாக உள்ளது வேறு ஒன்றும் இல்லை என்பது நன்கு புலனும். கடவுள் வாழ்த்து அதிகாரத்தில் இறுதியாக இக்குறளில் தெளிவாகவும், வலியுறுத்தியும் இவ்வாறு கூறிய கருத்தையே திருவள்ளுவர் இக்கடவுள் வாழ்த்து அதிகாரம் முழுவதிலும் ஆங்காங்கே இலை மறை காய் போல் பொதிந்து விளங்க அமைத்திருக்கின்றார்.

இவ்விறுதிக் குறளின் பொருளைத் திருவாசகம்,

“ தனியனேன் பெரும்பிறவிப் பௌவத் தெவ்வத்
  தடந்திரையால் எற்றுண்டு பற்றொன் றின்றிக்
கனியைநேர் துவர்வாயார் என்னும் காலால்
  கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட்டு
இனிஎன்னே உய்யுமா றென்றென் றெண்ணி
  அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின் றேனை
முனைவனே முதல்அந்தம் இல்லா மல்லற்
  கரைகாட்டி ஆட்கொண்டாய் மூர்க்க னேற்கே ”

என்ற திருப்பாடலால் இதனை விளக்கியது. இக்குறளில் ஆசிரியர் கடவுளை ‘இறைவன்’ என்ற பெயரால் குறித்தார். ‘இருள்சேர் இருவினையும்’ என்னும் குறளிலும் ‘இறைவன்’ என்றே குறித்துள்ளார். இறை என்பது இறுத்தல் - எல்லாப் பொருளிலும் தங்குதல் என்னும் கருத்தை உடையது. எனவே, இறைவன் எல்லாப் பொருளிலும் நீக்கம் அற நிறைந்திருப் பவன் என்னும் இயல்பு விளங்குகின்றது. எல்லாப்பொருளிலும் இருப்பவன் ஆகையினால் உயிரிலும் உயிர்க்குயிராய் நின்று அதற்கு நன்மை புரிபவன் என்பது விளங்கும். எனவே அந் நிலையினை உணர்ந்து அவனது திருவடியைப் புணையாகப்பற்றி நின்று இன்புறுதலே யாவர்க்கும் நலம் பயப்பதாகும்.

---

உ

சிவமயம்

காஞ்சிபுரம் தொண்டைமண்டல ஆதீனம்

குருமகாசந்நிதானம்

## ஸ்ரீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்

### திருநெறிய தெய்வத் தமிழ் மாநாட்டின் ஒன்பதாம் திருநாளில் வழங்கிய

# வாழ்த்துரை

23—5—1981

### வழிபாட்டு முறைகள் :

சைவசமயம், மக்கட்சமுதாயம் இறைவனருளைப் பெறுதற்குரிய வழிபாட்டு முறைகள் மூன்று என்று கண்டது. அவை முறையே திருவுருவ வழிபாடு, குருவையே இறைவனாகக் கருதி வழிபடல், அடியவர் வேடம் தாங்கியவர்களைப் பூண்டவேடத் திற்கேற்ப ஒழுக்கம், தகுதி உடையவர்களா என்று ஆராயாது திருவேடமே மெய்ப்பொருள் எனக்கருதி வழிபடல் என்பன. இம் மூன்று வழிபாடுகளுள் உருவ வழிபாடு பெரும்பாலோர் ஏற்றுக்கொள்கின்ற ஒன்று. குருவழிபாடெனும்போது குருவும் ஒரு மனிதன்தானே! மனிதன் மனிதனை வழிபடல் வேண்டுமா என்று கருதுவோரும் உளர். ஆனால் திருவேடம் பூண்டோர் அதற்குரிய ஒழுக்கமும் தகுதியும் அற்றவரெனின் திருவேடம் எனல் பொருந்தாது என்போர் பலர். திருவேடமே மெய்ப் பொருளென்பதில் ஒருவர்க்குமுழுநம்பிக்கை வரவேண்டுமானல் ஒவ்வொருவரிடமும் இயல்பாக அமைந்துள்ள இந்த வொரு குற்றம் முழுமையாக நீக்கப்படல் வேண்டும். இதனை உமாபதி சிவம் "புல்லறிவு தவிர்ந்து திருவேடமே மெய்ப்பொருள் எனக் கொண்டு அரனடிக்கீழ்ப் பொருந்தப்புக்கோர்" என்று குறிப்பிடு கின்றார். இவ்வாறான இந்த மூவகை வழிபாடும் ஒருசேர அமைவது குருபூசைவிழாக்களில்தான்.

### சைவத்தின் தொன்மை :

உலகமேடையில் இந்திய நாட்டிற்கென்று ஒருதனிச்சிறப்பு உண்டென்றால் அது இந்நாடு ஆன்மிகத்துறையில் பெற்றுள்ள

தகுதியேயாகும். இன்றுள்ள உருவ வழிபாட்டில் சிவலிங்க வழிபாடு மிகத் தொன்மையானது. ஆறுயிரம் ஆண்டுகட்கு முன்பே இவ்வழிபாடு நாட்டில் நிலவியிருக்க வேண்டும் என்பதை மேலை அறிஞர்கள் புதைபொருள் ஆய்விலிருந்து அறிகின்றோம். ஆனல் இதுபோன்று பழம்பெரும் நாகரிகம் பெற்றநாடுகளான எகிப்து, பாபிலோன், கிரேக்கம், உரோமாபுரி போன்ற நாடுகளில் அன்றிருந்த திருக்கோயில்கள் அனைத்தும் அழிந்துவிட்டன. வழிபட்டுவந்த திருவுருவங்கள் காட்சிப் பொருளாகக்கண்காட்சிச்சாலைகளில்வைக்கப்பட்டுள்ளதையும் காண்கின்றோம். ஆக இத்தொன்மை வழிபாடு தொடர்ந்து இந் நாட்டில்தான் இருந்துவருகிறது என்பது வெளிப்படை.

## அறிவியல் சிந்தனை :

விஞ்ஞான முன்னேற்றம் காரணமாக இந்நாட்களில் மனித வாழ்விற்குத்திருக்கோயில்களும் வழிபாடும் அவசியமா? என்ற எண்ணம் தோன்றுவது இயல்பு. எவ்வளவுதான் விஞ்ஞான முன்னேற்றமும் அறிவுவளர்ச்சியும் உண்டு என்றுலும் அது எந்தநேரம்வரை செயல்படுத்தமுடியும் என்பதனையும் சிந்திக்க வேண்டிய கடப்பாடு உடையோராவோம்.

## இயற்கையும் திருக்கோயில்களும் :

ஐம்பெரும் பூதங்களுள் ஏதேனுமொன்று தன்னிலையில் இருந்து சிறிது புரண்டாலும் மனிதமுயற்சியால் அதனைத் தடுத்து நிறுத்த இயலாது என்பது இன்றைய விஞ்ஞானவுலகு ஏற்றுக்கொண்டுள்ள உண்மை. அவ்வப்போது ஏற்படுகின்ற பூகம்பம், எரிமலை, பெருவெள்ளம், பெரும்புயல் இவற்றுல் வரும் துன்பங்கள் நமக்கு இதனை நினைவுறுத்திக் கொண்டுள் ளன. இதனைத்தான் இன்றைக்கு ஆயிரத்துநானூறு ஆண்டு கட்குமுன் வாழ்ந்த திருநாவுக்கரசு சுவாமிகள் "நடையை மெய்யென்று நாத்திகம் பேசாதே, படைகள் போல்வரும் பஞ்சமா பூதங்கள்" என்கின்றுர். இன்றைய உலகில் விஞ்ஞான ஆய்வில் முதலிடம் பெற்ற அமெரிக்க நாட்டில் புதிதாகச் சிவன் முருகன், பெருமாள் கோயில்கள் தோன்றுவானேன்? 'செல்வம் என்பது சிந்தையின் நிறைவே; அல்கா நல்குரவு அவாவெனப் படுமே' என்ற குமரகுருபர சுவாமிகளின் திருவாக்கைச் சிந்தித் தால் இது நன்கு விளங்கும்.

**தமிழக ஆலயங்கள் :**

இத்தொன்மை வழிபாடு இன்றும் நம் நாட்டில் தொடர்ந்து இருந்துவருகிறது என்றால் இதற்காதாரமாக இருப்பவை திருக் கோயில்களும் இவைகளைப் பேணிக்காத்த முறைமைகளுமே எனக் கூறலாம். தமிழ்நாட்டில்மட்டும் 60 000 திருக்கோயில் கட்கு மேல் இருப்பதை அரசியல் அறிக்கை தெரிவிக்கிறது, இது இவ்வுலகில் வேறு எந்த நாட்டிலும் காணமுடியாத ஒன்று. ஆக இதுபற்றிய நமது பொறுப்பு மிகமிக அதிகம் ஆகும்.

**ஆலய நிர்வாகம் :**

கல்வெட்டுக்கள் மூலம் கிடைத்துள்ள செய்திகளிலிருந்து பண்டைய நாட்களில் திருக்கோயில் எவ்வாறு நிருவகிக்கப் பட்டன என்பதைக் காண்கிறோம். சிறு கோயில்கள் பூசாரி களின் பொறுப்பிலேயே இருந்துள்ளது. பெரிய கோயில்கள் ஊராட்சி மன்றங்களாலும், மிகப்பெரியவை அதற்கெனநியமிக் கப்பட்ட குழுக்களாலும் நிருவகிக்கப்பட்டுவந்தன. அந்நிய ஆட்சி இந்த நாட்டில் இருந்த காலத்திலும் அவர்கள்கூட இவற்றின் பெருமை அறிந்து இவற்றைத் தக்கமுறையில் காக்க ஏற்பாடுகள் செய்துள்ளார்கள்.

**அந்நியராட்சியில் ஆலயநிர்வாகம் :**

கிழக்கிந்திய கம்பெனி ஆட்சியினர் 1817 ஆம் ஆண்டு இதன் நலங்கருதி ஒருசட்டம் இயற்றினர். விக்டோரியா மகாராணியார் இவ்விந்திய ஆளுகையை ஏற்றுக்கொண்ட போது தமதுஅரசு சமய விவகாரங்களில் தலையிடாது என்று அறிவித்தார். எனவே கோயில், சமய நிருவாகங்கள் அந்தந்த ஊர் மக்களிடமே ஒப்படைக்கப்பட்டது என்பதனையும், ஊர்ப் பூசல்கள் கோயில்கள் நிருவாகத்தில் தலையிட நேர்ந்தால் இதன் மேம்பாட்டிற்கு இடையூறு தோன்றாமலிருக்க வருவாய்த்துறை இதனைக் கண்காணித்து வந்துள்ளது என்பதனையும் காண் கின்றோம்.

**ஆலய நிர்வாகத்தினர் தகுதிகள் :**

நீதிக் கட்சியின் ஆட்சியில் அந்நாள் முதலமைச்சரான பனகல் அரசரின் பெரும் முயற்சியால் 1925 ஆம் ஆண்டு இதற்கென ஒரு சட்டம் உருவாயிற்று. அச்சட்டம்

அன்றாடம் கோயில்வழிபாட்டிற்குச் செல்கின்றவர்கள், விழா வெடுப்போர், சமய தத்துவ நூல்களைக் கற்றறிந்த பெருமக்கள், புதிதாக அறக்கட்டளை நிறுவியோர், சமய உணர்வு பெற்ற பொதுமக்கள் ஆகியோர் கோயில் நிருவாகங்களில் தக்க பங்குகொள்ள பெரும் வாய்ப்பை ஏற்படுத்தியது.

## தற்கால ஆலய ஆட்சிமுறைக் குறைகள் :

இந்த நாடு சுதந்திரம் பெற்றபிறகு கொண்டுவரப்பட்ட சட்டங்களின்படி நமக்கு முன்பிருந்ததைவிட மதவுரிமை மிகுதி யாகக் கொடுக்கப்பட்டுள்ளது. ஆனல் 1—1—1960 ல் தமிழக அரசால் இயற்றப்பட்ட சட்டத்தாலும், அதனைத் தொடர்ந்து கொண்டுவரப்பட்ட சட்டங்களாலும் மேற்படி உரிமைகள் அனைத்தும் பறிக்கப்பெற்று, எந்த ஒரு அரசியல் கொள்கை ஆட்சிபீடம் ஏறுகிறதோ அதன் சர்வபோக உரிமையாக ஆக்கப்பட்ட நிலையைக் காண்கின்றோம். இந்நிலை இப்படியே நீடிக்குமானல் பழம்பெரும் நாகரிகம் பெற்ற மேலைநாடுகளின் திருக்கோயில்கட்கு ஏற்பட்ட நிலை இங்கும் தோன்ற வழிவகுத்து விடும் என்பதில் ஐயம் இல்லை.

## ஆலயவருவாய் வறியார்க்கே :

திருக்கோயில்கள் சமய நிறுவனங்கள் ஆகியவற்றின் நலங் கருதிப் பண்டைப் பெருமக்களால் வழங்கப்பட்ட அனைத்து உடைமைகளும் அவை நிறுவியகாலத்திலேயே தேசஉடைமை ஆக்கப்பட்டதாகும். திருக்கோயிலில் நிகழ்வுறும் அன்றாட வழிபாடு சிறப்புவழிபாடு விழாக்கள் ஆகியவற்றிற்கு ஆகும் செலவுகள் அனைத்தும் ஏழைமக்கட்கும் குறிப்பாகச் சாதிமதம் இனம் நிறம் என்ற வேறுபாடின்றி அனைவர்க்கும் பயன்படும் நிலையில் அமைந்துள்ளதைச் சற்றுச்சிந்தித்தால் நன்குவிளங் கும். செல்வர்களால் ஆலயங்கட்கு வருவாயே தவிரச் செலவு கிடையாது.

## இறைத்தன்மையுடைய நமது சமயம் :

நமது சமயம், இந்தஉலகில் இதுவரை தோன்றிய அனைத்துச் சமயங்களும் இறையருளால் தோன்றியதென்பதையும், மக்கள் உண்மைச்சமய உணர்வுபெற இத்தகு படிநிலைகள் வேண்டற் பாலதே என்பதனையும் ஏற்றுக்கொள்கிறது. இவற்றைக் கீழ் வரும் அருளாளர்கள் வாக்கு தெரிவிக்கின்றது.

1\. " விரிவிலா அறிவினர்கள் வேறொரு சமயம் செய்து
எரிவினுல் சொற்ருரேனும் எம்பிராற் கேற்றதாகும் "

2\. " ஆரொருவர் உள்குவார் உள்ளத்துள்ளே
அவ்வுருவாய் நிற்கின்ற அருளுந் தோன்றும் "
— நாவுக்கரசர்

" அப்பனை நந்தியை ஆரா அமுதினை
ஒப்பிலி வள்ளலை ஊழி முதல்வனை
எப்பரி சாயினும் ஏத்துமின் ; ஏத்தினுல்
அப்பரிசு ஈசன் அருள்பெற லாமே." — திருமூலர்

" வேறுபடு சமயம் எலாம் புகுந்து பார்க்கின்
விளங்கு பரம் பொருளே நின்விளையாட்டல்லால்
மாறுபடுங் கருத்தில்லை " — தாயுமானுர்

**முடிவுரை :**

ஆகவே சைவ சமயம், அனைத்துச் சமயங்களும் மக்கள் உண்மைச் சமயவுணர்வுபெற அவசியம் என்பதனை முழுமை யாக ஏற்றுக் கொள்கிறது. இந்நிலையில் இன்றைய நிகழ்ச்சியை ஆழ்வார் திருநாள் இலக்கியப் பேருரையாக நடைபெறக் குருமகாசந்நிதானம் திருவுளம்பற்றியதைச் சிந்திக்கவேண்டிய கடப்பாடு உடையவராவோம். இதுஎதிர்காலத்தில் அனைத்துச் சமய தத்துவமேதைகளின் சிந்தனைமேடையாகத் திகழ வழி வகுக்கும் என்பதில் ஐயமில்லை.

---

## வேளூரில் வசந்தோற்சவம்

தருமையாதீனத்திற்குச் சொந்தமான வேளூர் வைத்தியநாத சுவாமி திருக்கோயிலில் 9—5—81 தொடங்கி 18—5—81 வரை பத்து நாட்கள் வசந்தோற்சவ விழா சிறப்பாக நடைபெற்றது. பத்து நாட்களிலும் சுவாமி புறப்பாடாகி வசந்த மண்டபத்தில் ஊஞ்சல் உற்சவம் கொண்டருளிய காட்சியை அன்பர் பலர் தரிசித்து அருள்பெற்றனர்.

## ஸ்ரீ குருஞானசம்பந்தர் பணிமன்றம் மேலையூர் (கிளை)

இப்பணிமன்றத்தின் சார்பில் 1980 – 81ல் ஆதரவற்ற ஏழை களுக்கு வீடுகட்டித்தரும் பணித்திட்டத்தில், மேலையூர் பல்லவனீச்சரம் புளியந்தோப்பில் பழுதடைந்த நிலையிலிருந்த ஆதரவற்ற ஒரு முதியவளின் வீடு பல அன்பர்களின் உதவி கொண்டு திருத்திக் கட்டிக் கொடுக்கப்பட்டுள்ளது.

தருமையாதீனம்

# ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானங்களின்

## திருவருட்பெருமை

### திரு. சொ. அரியநாயகம் எம். ஏ.,

சன்னிதானம் — மகா — சன்னிதானம் — அவன்
தாளிணையே சிவஞானம் தருமபுரச் (சன்னிதானம்)

1 ஆலவாய்ச் சொக்கனைக் கரம்கொண்டு — குரு
ஞானப் பிரகாசரின அருள் மொண்டு
கோலமாய்த் தருமையில் மடம் கண்ட — எங்கள்
குருஞான சம்பந்த தேசிகனே — முதல் (சன்னிதானம்)

2 பகைதீர உயிர்யாவும் ஆட்சிசெய்த — புகழ்
குருஞான சம்பந்தன் ஆசியுடன்
அகம்மேவும் மோனத்தில் வீடுகண்ட — ஓர்
ஆனந்த பரவச தேசிகனே — இரண்டாம் (சன்னிதானம்)

3 ஆனந்த பரவசரின் நிலையுணர்ந்து — தருமை
ஆதீன அருட்சோதி நிழலமர்ந்து
தானந்தம் இல்லாத குருமுதல்வன் — ஞானத்
தனயனும் சச்சிதானந்த தேசிகனே — மூன்றாம்
(சன்னிதானம்)

4 குமர குருபரற்குத் தீட்சைசெய்து — சைவக்
கோலத்தை வடக்கே ஓங்கச்செய்து
பரமன் திருவருள் காணச்செய்து — திருப்
பணிகண்ட மாசிலா மணிதேசிகனே — நாலாம்
(சன்னிதானம்)

5 தென்பாண்டி மக்கள் நலம்நினைந்து — ஆற்றில்
திரண்டோடும் வெள்ள இடர்களைந்து
அன்போடு சிவத்தலம் பலபணிந்த — இன்பம்
அருள்ஞான சம்பந்த தேசிகனே — ஐந்தாம் (சன்னிதானம்)

6 குகைமட அதிபர்க்கு அமைதிதந்து — வேள்விக்
குன்றிலே வள்ளியை நேர்கண்டு
தகவுற சம்பந்த சரணலயர்க்கே — ஞானம்
தந்ததிரு ஞானசம்பந்த தேசிகனே — ஆறாம்(சன்னிதானம்)

7 குருநிந்தனை செய்த மன்னனுக்கே — விழி
குருடாக்கிப் பிறரை ஊமையாக்கி
குருவருளால் அவர்கள் துயர்நீக்கி — வாழ்வு
கொடுத்தவர் திருவம்பல தேசிகனே—ஏழாம்(சன்னிதானம்)

8 சுவர்க்கபுர ஆதீனம் உருவாக்கி — அதன்
கிளிவிடு தூதுக்குப் பொருளாகி
அவிர்ஒளி சிவஞானச் சுடராகி — விளங்கும்
அழகிய சிற்றம்பல தேசிகனே — எட்டாம் (சன்னிதானம்)

9 உயிர்யாவும் பகைதீர அருள்நோக்கி — வேளூர்க்
குமரனின் திரைநீங்கப் பதம்நோக்கி
சித்தாந்த நிச்சய நூலாக்கி — உயர்
திருநாவுக் கரசு தேசிகனே — ஒன்பதாம் (சன்னிதானம்)

10 செந்திலில் போத்திகள் செருக்ககற்றி — ககனச்
சித்தரைச் சிவஞான நெறிசெலுத்தி
வந்தபிரம ராட்சதப் பிணிஅகற்றி — காசி
வாசியான சிவஞான தேசிகனே — பத்தாம் (சன்னிதானம்)

11 பட்டத்து அரசனின் பசியமர்த்தி — அவன்
பரிசாலே தருமையின் அறமுயர்த்தி
கெட்டவர் தரும்நஞ்சின் விஷமகற்றி — அவரைத்
திருத்திய சச்சிதானந்த தேசிகனே — பதினோராம்
(சன்னிதானம்)

12 இராமேஸ் வரந்தனில் அன்னம்பாலித்து — அங்கே
எழுந்ததீ விபத்தின் துயர் துடைத்து
பராவரும் நெல்லைத் தலம் பார்த்து — கோவில்
பணிகொண்ட முத்துக்குமார தேசிகனே — பனிரண்டாம்
(சன்னிதானம்)

13 அருணாசலக் கவிராயர்க்கு உபதேசம் — மெய்
அடியவர் இணையில்லாக் குருநேசம்
தருமையில் கங்கையின் பிரவேசம் — அதில்
நீராடிய ஞானசம்பந்த தேசிகனே — பதின்மூன்றாம்
(சன்னிதானம்)

14 திருவருளால் மழையைப் பெய்வித்து — நெல்லைத்
துயர்துடைத்து, குருவைப் பரிகசித்த
ஒருதுரை குற்றத்தை மன்னித்து — அருள்
ஓங்கிய கந்தப்ப தேசிகனே — பதினான்காம்(சன்னிதானம்)

15 மேகராகக் குறிஞ்சியிலே பண்பாடி — மழை
மேவிடச் சொக்கன் துதிபாடி
வேகமுடன் பழனித் தலம்நாடி — பக்தர்
உயிர்மீட்ட மாசிலாமணிதேசிகனே — பதினைந்தாம்
(சன்னிதானம்)

16 மருவிடும் சித்தாந்தக் கனிபிழிந்து — தனக்கு
மகாவித்வான் புனைந்தணிந்த தமிழ்வியந்து
ஒருபிரம்ம சூத்திரத்தின் பொருளுரைத்து — அருள்
உணர்வினன் சச்சிதானந்த தேசிகனே — பதினாறும்
(சன்னிதானம்)

17 அமுத கடேசருக்குக் குடமுழுக்கு — செய்த
மாணிக்க வாசக தேசிகனும்
பிரம்ம புரீசர்க்குக் குடமுழுக்கு — கண்ட
காசிவாசி சிவஞான தேசிகனும் (சன்னிதானம்)

18 மக்கள் மனம்மலர ஆசிதந்த — புகழ்
மாணிக்க வாசக தேசிகனும்
தக்க பணிசெய்தே ஐயாற்றில் — பக்தி
நலம்கண்ட சிவஞான தேசிகனும் — பின்வந்த
(சன்னிதானம்)

19 தருமையின் பெருமையை வளப்படுத்தி — சிவ
தருமத்தின் பெயரால் தமிழ்பெருக்கி
ஒருமையில் பூசனை மிக உயர்த்தி — தவம்
உயர்சச்சி தானந்த தேசிகனே — இருபத்தோராம்
(சன்னிதானம்)

20 சீரான திருப்பணிகள் பலஎடுத்து — சைவ
சித்தாந்த மாநாட்டின் நலம்விளைத்து
மேலான தொண்டுக்குத் துணை கொடுத்து — உயர்
மாணிக்க வாசக தேசிகனே — இருபத்திரண்டாம்
(சன்னிதானம்)

21 திருக்காப்பில் இருநாட்கள் கழிந்திடினும் — சொக்கன்
திருவருளால் விளக்கெரிந்த காட்சிகண்டு
திருத்தலம் பலசென்ற இளம்துறவி — செந்
தமிழ்வென்ற சுப்ரமண்ய தேசிகனே — இருபத்துமூன்றும்
(சன்னிதானம்)

22 தருமையைச் சிவம்பரவும் கோவிலாக்கி — ஞான
தத்துவ நூல்மலரும் சோலையாக்கி
தருமமிகு கலைவளரும் சாலையாக்கி — வளர்
தயாநிதியாம் சண்முக தேசிகனே — இருபத்துநாலாம்

(சன்னிதானம்)

23 தேவாரம் ஓதுதற்குப் பயில்நிலையம் — வாழ்வில்
திக்கற்ற குழந்தைகட்கு நல நிலையம்
நாவாரத் தமிழ்கற்கக் கலை நிலையம் — கண்ட
நாயகனும் குருமணிஓர் அருள்நிலையம்

24 மாமதுரைச் சொக்கன் குடமுழுக்கில் — அவன்
மதுரத் திருமேனிச் சுகம்திளைத்து
தேமதுரத் தமிழுக்கு உயர்வமைத்து — கலை
தெளிந்தபல் அறிஞர்க்கு வரிசைதந்து

25 கயிலையின் காட்சிகண்ட தெய்வமணி — வட
காசியில் சாந்திகண்ட தவமணி
உயர்ந்தநல் லறம்கண்ட சிவமணி — எங்கள்
உளம்கொண்ட சுப்ரமண்யதேசிகனே — இருபத்தைந்தாம்

(சன்னிதானம்)

26 குருஞானசம்பந்தர் இயக்கம்கண்டு — சைவக்
கொள்கையே வாழ்வாக மலரக்கண்டு
அருள்ஞான சித்தாந்த விலாசம்கண்டு — சிவன்
அடியாரின் உளம்யாவும் இருக்கை கொண்டு

27 தவம்பெருகித் தருமையிலே கனிந்துநிற்ப — உயிர்
தயைபெருகி அன்பருளம் ததும்பிநிற்க
சிவம்பெருகிச் சேவையிலே சிறந்துநிற்ப — தமிழ்ச்
சீர்பெருகி அருளமுதம் சுரந்துநிற்ப

28 கருணைவிழி மலரில் அருள்முகந்து — தம்மைக்
காணவரும் நெஞ்சத்தின் அளவறிந்து
தருணம் அதுகண்டு சிவம்கலந்து — ஊட்டும்
தாயேநம் சண்முக தேசிகனே — இருபத்தாறும்

(சன்னிதானம்)

தருமையாதீனக் குருமுதல்வர் குருபூஜை விழாவில்



ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள்
பக்தர்கள் புடைசூழ, பட்டினப்பிரவேசத்திற்கு எழுந்தருளுதல்.
25—5—81

## தருமையாதீனக் குருமுதல்வர் குருபூஜை விழாவில்



ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள்
பக்தர்களுடன், பட்டினப்பிரவேசமாக, சிவிகையில் திருவீதியுலாவருதல்
25—5—81

திருவாமூர் ஸ்ரீ திருநாவுக்கரசு சுவாமிகள் குருபூஜை விழாவில்



அப்பர் தேவார அருந்தமிழ் மாநாடு
2-ஆம் நாள் வழக்காடு மன்றத்திற்குத் தலைமை தாங்கிய
குன்றக்குடி ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களை,
குருபூஜை விழாக்குழுத் துணைச்செயலர்
திரு. திருநாவுக்கரசு பிள்ளை வரவேற்றல்
28—4—1981



தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களை,
குருபூஜை விழாக்குழுச்செயலர்
திரு. C. வாகீசம் பிள்ளை
துணைச்செயலர் திரு. திருநாவுக்கரசு பிள்ளை
முதலியோர் வரவேற்றல்
9—4—1981

தருமை யாதீனம் குருபூஜைவிழா – கொலுக்காட்சியில்



ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களை
மதுரை திரு. P. T. R. கமலத்தியாகராஜன் அவர்களும்
அவர்தம் துணைவியாரும் வழிபட்டு அருளாசி பெறுதல்.

# திருச்சிக்கல், திருக்கீழ்வேளூர்

## தலச்சிறப்புக்கள்

தருமையாதீனத் தமிழ்ப்புலவர், திருவாசக உரைமணி,

**வித்துவான் திரு. வி. சா. குருசாமி தேசிகர் எம், ஏ.,**

தஞ்சை மாவட்டத்தில் நாகப்பட்டினத்தை அடுத்து விளங்கும் இவ்விருதலங்களும் வரலாற்றுப்புகழ் படைத்தவை; கோச்செங்கட்சோழன் கட்டிய மாடக்கோயில்களாக விளங்கு பவை. சிக்கலில் விளங்கும் அருள்மிகு சிங்காரவேலரும், கீழ் வேளூரில் விளங்கும் அருள்மிகு கேடிலியப்பரும், அருள்மிகு அஞ்சுவட்டத்தம்மையும் புகழ்பெற்ற மூர்த்திகளாவார்கள்.

### 1. திருச்சிக்கல்

இத்தலம் நாகப்பட்டினத்திற்கு மேற்கே 5 கி. மீ. தூரத்தில் உள்ளது. திருவாரூர் – நாகை புகைவண்டித்தொடரில் சிக்கல் புகைவண்டி நிலையத்தில் இறங்கி வடக்கே 1. கி. மீ. தூரம் வந்தால் கோயிலை அடையலாம். திருவாரூர் – நாகை பேருந்துச் சாலையில் பேருந்துகளில்வருவோர் கோயிலுக்கு அருகிலேயே இறங்கலாம். நாகையிலிருந்தும் திருவாரூரிலிருந்தும் பேருந்து களில் வருவதே எளிமையானது.

சோழநாட்டுக் காவிரித்தென்கரைத் தலங்களில் இது83வது தலமாகும். திருஞானசம்பந்தர் அருளிய திருப்பதிகத்தைப் பெற்றது. நாள்தோறும் ஆயிரக்கணக்கான மக்கள் வந்து தரிசித்துச் செல்லும் சிறப்புடையது. இங்கு எழுந்தருளியுள்ள அருள்மிகு சிங்காரவேலர் கலியுகத்திலும் கண்கண்ட கடவு ளாய் விளங்குகிறார். உலகவாழ்க்கையில் ஏற்படும் பலவகைச் சிக்கல்களையும் போக்கி நல்லருள் புரிபவராக இம்முருகன் விளங்குகின்றார். கந்த சஷ்டி விழா இத்தலத்தில் சிறப்புடைய திருவிழாவாகும். முருகன் " சிக்கலில் வேல்வாங்கிச் செந்தூரில் சங்காரம் செய்தார் " என்பது பழமொழி. சஷ்டித்திருநாளின்

முதல்நாள் சிங்காரவேலர் அருள்மிகு வேல்நெடுங்கண்ணி அம்மையிடம் வேல்வாங்கி வீராவேசத்துடன்வரும் சமயத்தில் அவர் திருமேனியில் வியர்வைத் துளிகள் துளிர்க்கும் அற்புதம் இன்றும் நிகழ்ந்துவருகிறது.

வசிட்டர், காமதேனுவின் வெண்ணெயினுல் சிவலிங்கத் திருவுருவம் அமைத்துப்பூசித்தார். பூசைமுடிவில் அதை எடுக்க முயன்றபோது சிவலிங்கம் எடுக்க முடியாமல் சிக்கிய காரணத் தினுல் சிக்கல் என்னும் பெயர் இத்தலத்திற்கு உண்டாயிற்று எனத்தலபுராணம் கூறுகிறது. இறைவன் வெண்ணெய்ப் பிரான் என்றே தேவாரப்பாடல்தோறும் போற்றப்படுகின்ருர்.

சிதம்பரம்போலச் சிவன்கோயிலும் திருமால்கோயிலும் இணைந்திருப்பது இக்கோயிலுக்கு மேலும் சிறப்பைத்தருகிறது. இவ்வாறு சிவாலயங்களில் திருமால் ஆலயம் இணைந்து அமைந் துள்ள கோயில்கள் பதினெட்டு எனக்கூறுகின்றனர். அறுபத்து நான்கு சக்திபீடங்களில் இத்தலமும் ஒன்று எனக்கூறுவர் ஆன்ருேர். நாட்டுக்கோட்டை நகரத்தாரின் சிறந்த திருப்பணி பெற்று விளங்குகின்றது. இத்திருக்கோயிலில் விலை உயர்ந்த திருவாபரணங்கள் - வாகனங்கள் உள்ளன. கோயிலின் வாயிலில் அமைந்துள்ள கலையரங்கம் பேரழகோடு விளங்கு கிறது. பல்லாயிரமக்கள் இருந்து காணத்தக்க இடவசதியுள்ள இம்மண்டபம் கோயிலுக்குத் தனிச்சிறப்பைத்தருகிறது.

**கோயிலமைப்பு:**

கோயில் கிழக்குநோக்கியுள்ளது. ஏழு நிலைகளோடுகூடிய இராஜகோபுரமும், திருமால் கோயிலின் வாயிலில் மூன்று நிலைக் கோபுரமும் உள்ளன. இது முருகன் தலம் என்பதற்கேற்பக் கோபுரத்தை அடுத்துக் கார்த்திகை மண்டபம் உள்ளது. இம் மண்டபத்தின் தென்புறத்தில் நிலைக்கண்ணுடி உள்ளது. கந்த புராண வரலாறுகள் அழகிய ஓவியங்களாக எங்கும் எழுதப் பெற்றுள்ளன. இருபிராகாரங்களும் மலைமேல் ஒருபிராகாரமும் உள்ளன. இரண்டாவது வாயிலைக் கடந்து உள்ளே சென்ருல் கொடிமரமும் வடபால் அம்பாள் கோயிலும் உள்ளன.

முதற்பிராகாரத்தில் தென்புறத்தில் வாகன அறைகள் உள்ளன. அடுத்து அறுபத்துமூவர் மண்டபம் உள்ளது. மேல் புறத்தில் விசுவநாதர், விசாலாட்சி, கார்த்திகை விநாயகர் உள்ளனர். அடுத்து ஆறுமுகக்கடவுள் எழுந்தருளியுள்ளார்.

மிக்க அழகுடைய மூர்த்தி இவர். எட்டுக்குடி, எண்கண், சிக்கல் ஆகிய மூன்று தலங்களில் விளங்கும் ஆறுமுகப்பெருமான் ஒரே அமைப்புடைய மூர்த்திகளாக இருத்தலால் இம்மும்மூர்த்திகளும் ஒரேஸ்தபதி செய்தவை என்பர். வடபால் திருமகள், சண்டேசுவரர் கோயில்கள் உள்ளன.

சுவாமி எழுந்தருளியுள்ள கட்டுமலை கோயிலின் நடுவில் உள்ளது. இம்மலையின் தென்புறத்தில் சனிபகவான் சந்நிதியும், வசிட்டர் முதலிய ஏழுமுனிவர்கள் சந்நிதியும், மல்லிகைமரமும், தக்ஷிணமூர்த்தி சந்நிதியும், வடக்கே துர்க்கை சந்நிதியும் உள்ளன. வலமாக வந்து மலைமீதுசெல்லப் படிக்கட்டுக்கள் உள்ளன. படிகளுக்குப் பக்கத்திலுள்ள சுந்தரகணபதியை வணங்கி மேலே செல்வோம். தேவகோட்டம் எனப்படும் மேல்மண்டபத்தில் தனிக்கோயிலில் சோமாஸ்கந்தர் விளங்குகிருர். இம்மண்டபத்தின் வடபால் அருள்மிகு சிங்காரவேலர் தெற்குநோக்கி எழுந்தருளி உள்ளார். வணங்கிக்கொண்டு சுவாமிசந்நிதியை அடைவோம். சுவாமிசந்நிதியில் தனி அழகோடு திகழும் முன்மண்டபத்தில் உள்ள அருள்மிகு வெண்ணெய்ப்பெருமானை வழிபடுவோம்.

அம்பிகை அருள்மிகு வேல்நெடுங்கண்ணி தெற்குநோக்கி விளங்குகின்ருர். மிக்க அழகுடைய திருவுருவோடு காட்சி தரும் இவ்வன்னையை வழிபடுவோம். அருள்பெறுவோம். முதற்பிராகாரத்தில் வடக்குத் திருச்சுற்றில் கோலவாமனப் பெருமாள் எழுந்தருளியுள்ளார். வழிபட்டு நலமுறுவோம்.

**மூர்த்திகள் :**

இறைவன் திருப்பெயர் அருள்மிகு வெண்ணெய்ப்பிரான். வடமொழியில் நவநீதேசுவரர் என வழங்குவர். இத்தலத் தேவாரத்திருப்பதிகத்தில் பாடல்தோறும் இப்பெயர் குறிப்பிடப் படுகின்றது. அம்பிகை திருப்பெயர் அருள்மிகு வேல்நெடுங் கண்ணி. வடமொழியில் சத்தியாயதாக்ஷி என்பர். சோமாஸ் கந்தர் சந்நிதி விசேடம். இங்கு மரகதலிங்கம் உள்ளது. முருகன் அருள்மிகு சிங்காரவேலர் என்ற திருப்பெயரோடு விளங்குகிருர். இத்தலத்திற்குத் தனிப்பெருமைதரும் இம்மூர்த்தியின் சந்நிதி மிகவும் அழகோடு பேணப்பட்டுவருகிறது.

தலமரம் – குடமல்லிகை. தீர்த்தம் – பால்குளம்; க்ஷீர புஷ்கரிணி எனவும் கூறுவர்; கோயிலின் மேல்பால் உள்ளது. மற்றும் கயாதீர்த்தம், இலக்குமி தீர்த்தம், அம்மாகுளம், விருத்த காவேரி முதலிய தீர்த்தங்களும் உள்ளன.

**புராணவரலாறுகள்:**

விசுவாமித்திரர், வசிட்டர், அகத்தியர், காத்தியாயனர், நாரதர் முதலிய முனிவர்கள் வழிபட்டுள்ளனர். மல்லிகைவனம் என்பது இதன் பழம்பெயர்.

**காமதேனு சாபம் நீங்கியது:**

முன்னொருகாலத்தில் நாடு பன்னிரண்டு ஆண்டுகள் வற்கடம் உற்றது. "விசும்பில் துளிவீழினல்லால் மற்றாங்கே பசும்புல் தலை காண்பரிது" என்ற வள்ளுவர் வாய்மொழிக் கிணங்க மழையின்மையால் புல்லும் மண்ணில் முளைக்கவில்லை. காமதேனு விண்ணகத்திலிருந்து மண்ணகம்வந்து பசியால்வாடி வருந்தி, இறந்துகிடந்த நாயின் இறைச்சியைத் தின்று உயிர் தாங்கிற்று. சிவபெருமான் காமதேனுவின் இழிசெயலை அறிந்து அதனைப் புலிமுகம் கொண்டு திரியுமாறு சபித்தார். காமதேனு வருந்திச் சாபவிடுப்பு அருளுமாறு வேண்டிற்று. பெருமான் சோழநாட்டுள் மல்லிகார்ச்சுனம் என வழங்கும் இத்தலத்தில் அமிர்ததடாகத்தில் மூழ்கித் தன்னை வழிபட்டால் பழி நீங்கும் என்றருளினர். காமதேனு இறைவனருளியபடி இத்தலத்தை அடைந்து அமிர்ததடாகத்தில் நீராடிப் பெருமானை வழிபட்டுச் சுய உருவம் பெற்றது. வழிபாட்டின்போது காமதேனுவின் மடியிலிருந்து பால் பெருகி நிறைந்ததால் திருக்குளம் பாற்குள மாயிற்று. திருக்கோயிலின் மேல்பால் உள்ள இத்திருக்குளத்தில் நீராடி வழிபடுவோர் எல்லா நலன்களையும் எய்திவருகின்றனர்.

**மல்லிகைவனம் சிக்கல் ஆனது:**

வசிட்ட முனிவர் இத்தலத்தில் காமதேனுவின் பால் பரவிய திருக்குளத்தில் உண்டான வெண்ணெயைத் திரட்டிச் சிவலிங்க மாக்கி வழிபட்டார். பூசை முடிவில் சிவலிங்கத்தை அப்புறப் படுத்த முயன்றபோது சிவலிங்கம் சிலைவடிவாக ஆயிற்று. எவ்வளவு முயன்றும் மல்லிகைப்பொதும்பரில் சிக்கிய சிவலிங் கத்தை முனிவரால் பெயர்க்கமுடியவில்லை. இருந்தவாறே வைத்து வழிபட்டு அருள்பெற்றார். இச்சிவலிங்கத் திருவுருவி லேயே எந்நாளும் எழுந்தருளியிருந்து வேண்டுவார் வேண்டு வதை நல்கும்வரம்பெற்றார்.

பெருமான் மல்லிகைப் பொதும்பரில் சிக்கிய காரணத்தால் தலம் சிக்கல் என்றாயிற்று. வெண்ணெயைத் திரட்டிச் செய்யப் பெற்ற மூர்த்தியாதலின் சிவலிங்கப்பெருமான் வெண்ணெய்ப் பிரான் என வழங்கபெற்றார். அன்பெனும் பிடியில் சிக்குபவர்

எழுந்தருளியதலம் என்னும் பொருளில் ஊரும், வன்மனத்தையும் வெண்ணெய்போல் உருகச்செய்பவர் என்னும் பொருளில் வெண்ணெய்ப்பிரான் எனப் பெருமானும் குறிக்கப்படுகின்றனர் எனக் கூறுவதுமுண்டு.

### கோலவாமனர் பேறுபெற்றது :

மண்ணுலகில் வீற்றிருந்து அரசாண்ட மாவலியால் தேவர்கள் பலரும் துன்புற்றனர். திருமால் மாவலியை அழிக்கும் ஆற்றலைப்பெற இத்தலத்திற்குவந்து நவநீதப் பெருமானைப் பூசித்து வழிபட்டார். இறைவனருளால் பேராற்றல் பெற்று மாவலியிடம் மூன்றடிமண் கேட்டுச்சென்று அவனை அழித்துத் தேவர்களுக்கு நல்வாழ்வு அருளினார். இவரது திருக்கோயில் வடக்குப் பிராகாரத்தில் உள்ளது. 'விண்டு இரைத்த மலரால் திகழ் வெண்ணெய்ப்பிரான்' எனத்திருஞானசம்பந்தர் இத்தலத் தேவாரத்தில் இதனைக் குறிப்பிட்டருள்கிறார்.

### விசுவாமித்திரர் முதலியோர் வழிபட்டது :

விசுவாமித்திரர் மேனகையைக்கூடித் தன்தவமிழந்து மனக் கவலையுற்று வருந்தியபோது, வாமதேவமுனிவர் சிக்கல் சென்று பாற்குளத்தில் நீராடி வெண்ணெய்ப்பிரானை வழிபட்டால் உன் பாவம் தீரும் என்றார். அம்முனிவர் கூறியபடியே விசுவாமித்திரர் இங்குவந்து பெருமானை வழிபட்டு நல்லருள்பெற்றார். அகத்தியர், காத்தியாயனர், நாரதர் முதலியோர்களும் இங்கு வந்து வழிபட்டுள்ளனர்.

திருடன், பெருநோயாளி, உடற்குறை உடையோன் ஆகிய மூவர் வெண்ணெய்ப்பிரானை வழிபட்டுப் பாவம்நீங்கி வரம்பெற்றனர் எனக்கூறப்படுகிறது. 'சிட்டன் சிக்கல் வெண்ணெய்ப் பெருமான் செழுமாமறைப்பட்டன் சேவடியே பணிமின் பிணி போகவே' என்பது இத்தலத் தேவாரம்.

### முசுகுந்தன் வழிபட்டது :

வேட்டையாடச் சென்ற அயோத்திமன்னன் முசுகுந்தனின் குதிரைக்காற் குளம்பு பட்டு அந்தணன் ஒருவன் இறந்து போனான். அக்கொலைப்பழி நீங்கச் சிவதலயாத்திரை செய்த மன்னன் சிக்கலை அடைந்தான். திருப்பாற்குளத்தில் நீராடி வெண்ணெய்ப்பிரானை வழிபட்டு நற்பேறுபெற்றான். மனம் மகிழ்ந்து மன்னன் திருச்சிக்கல் கோயிலைச் சீர்பெறத் திருப்பணி புரிந்தும் தியோகேசரைப் பிரதிட்டைசெய்தும் திருவிழா நிகழ்த்தியும் இன்புற்றான்.

## கோச்செங்கட்சோழன் வழிபட்டது :

திருவானைக்காலில் சிலந்தியாகப்பிறந்து சிவபெருமானை வழிபட்ட புண்ணியப்பயனால் கோச்செங்கட் சோழனாகத் தோன்றி யானை ஏருத எழுபது மாடக்கோயில்களைக் கட்டிய மன்னன் கோச்செங்கட்சோழன். கிழக்குநோக்கிய சந்நிதி யோடு விளங்கும் அத்தகைய மாடக்கோயில்களில் ஒன்றாக விளங்குவது சிக்கல். மாடக்கோயில்கள் யானை ஏருத திருக் கோயில்கள் எனப்போற்றப்படுவன. உட்கோயில் கருங்கல் திருப்பணி. மற்றும் மண்டபங்கள் கோயில்கள் முதலியன பிற்காலத்தில் திருப்பணி செய்விக்கப்பெற்றவை. அண்மைக் காலத்தில் நாட்டுக்கோட்டை நகரத்தார் பெரும்பொருட் செலவில் திருக்கோயிலையும் திருக்குளம் முதலியவற்றையும் திருப்பணிகள் செய்வித்துள்ளனர்.

## திருவிழாக்கள் :

சித்திரைத்திங்களில் பெருவிழா நடைபெறுகிறது. ஐப்பசிக் கந்த சஷ்டித் திருவிழா நாட்களில் சிங்காரவடிவேலர்க்குப் பெருவிழா நிகழ்கின்றது. நாள்தோறும் ஆறுகால பூசைகள் நடைபெறுகின்றன.

இத்திருக்கோயில் சென்னை அறநிலைய ஆட்சித்துறைப் பொறுப்பில் நன்முறையில் பரிபாலிக்கப்பட்டுவருகிறது.

வானு லாவுமதி வந்துல வும்மதின் மாளிகை
தேனு லாவுமலர்ச் சோலைமல் குந்திகழ் சிக்கலுள்
வேனல்வே லைவிழித் திட்டவெண் ணெய்ப்பெரு மானடி
ஞானமா கநினை வார்வினை யாயின நையுமே.

மாலி னேடரு மாமறை வல்ல முனிவனும்
கோலி னார்குறு கச்சிவன் சேவடி கோலியும்
சீலந் தாமறி யார்திகழ் சிக்கல்வெண் ணெய்ப்பிரான்
பாலும் பன்மலர் தூவப் பறையுநம் பாவமே.

பட்டை நற்றுவ ராடையி னாரொடும் பாங்கிலாக்
கட்ட மண்கழுக் கள்சொல் லினைக்கரு தாதுநீர்
சிட்டன் சிக்கல்வெண் ணெய்ப்பெரு மான்செழுமாமறைப்
பட்டன் சேவடி யேபணி மின்பிணி போகவே.

— திருஞானசம்பந்த சுவாமிகள்.

## 2. திருக்கீழ்வேளூர்

இத்தலம் திருவாரூருக்குக் கிழக்கே 12 கி. மீட்டர் தூரத்தில் உள்ளது. நாகை - திருவாரூர் பேருந்துச்சாலையில் ஓடம்போக்கி ஆற்றின் தென்கரையில் விளங்குவது. திருவாரூரிலிருந்து நாகை செல்லுகின்ற புகைவண்டித் தொடரில் கீழ்வேளூர் இரயில் நிலையத்திலிருந்து வடக்கே 1 கி. மீட்டர் தூரம் வந்தால் கோயிலை அடையலாம். திருவாரூர் - நாகை நகர்களிலிருந்து பேருந்துகளில் செல்வோர் கோயிலின் அருகில் இறங்கலாம்.

வேளூர் என்ற பெயருடைய தலங்கள் பல இருத்தலால் கிழக்கே உள்ள வேளூர் என்றபொருளில் இவ்வூர் கீழ்வேளூர் என வழங்கப்படுகிறது. பதரிகாரண்யம் என வடமொழியில் வழங்குவர்.

**தலச்சிறப்பு :**

சோழநாட்டுக் காவிரித் தென்கரைத் தலங்களில் 84 வது தலம். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் அருளிய இரண்டு தேவாரத் திருப்பதிகங்களைப் பெற்றது. சுந்தரர் அருளிய தேவாரத்திலும் இடம்பெற்றுள்ளது. கோச்செங்கட் சோழ மன்னர் கட்டிய மாடக்கோயில்களில் ஒன்ருக விளங்குவது. முருகக்கடவுள் பூசித்த தலம். முருகப்பெருமானது பூசைக்கும் தவத்துக்கும் இடையூறு நேராதபடி ஐந்து திக்குகளிலும் காவல் புரிந்த அஞ்சுவட்டத்தம்மன் என்னும் காளிகோயில் இத்தலத்தில் சிறப்புடைய மூர்த்தியாவார். அகத்தியர் பூசித்த சிவலிங்கம் உள்ளது. இங்குள்ள நடராசரின் தாண்டவபேதம் தனியழகுடையது. அகத்தியருக்கு வலதுபாத தரிசனம்தந்த மூர்த்தி இவர். சுந்தரகணபதி, குபேரன், இந்திரன் முதலியோர் உருவங்கள் உள்ளன. சிற்பக்கலைச்சிறப்பும் தெய்வீக ஒளியும் உடைய இத்தலத்தின் பெருமைக்கு மூலமாக விளங்கும் பெருமான் கேடிலியப்பராவார். "கேடிலியை நாடுமவர் கேடிலாரே" என்ற மகுடத்தோடு அப்பர் அருளிய இத்தலத் திருத்தாண்டகப் பதிகம் படிப்பவர்க்கு மிக்க மன உருக்கத்தை உண்டாக்குவது.

**கோயிலமைப்பு :**

ஊரின் நடுவே கோயில் அழகுற அமைந்துள்ளது. எதிரே சரவணப்பொய்கை தீர்த்தம் உள்ளது. கிழக்குநோக்கியசந்நிதி. மாடக்கோயில். இரண்டு பிராகாரங்கள் உள்ளன. ஏழுநிலைக ளோடு கூடிய இராஜகோபுரத்தைக்கடந்து உள்ளே சென்ருல்

வலதுபக்கம் வசந்த மண்டபத்தில் அலுவலகம் உள்ளது. கிழக்குப்பிராகாரத்தில் திருப்பணிக்கென, கருங்கல்லில் சீராக்கி வைக்கப்பட்டுள்ள கருப்பக்கிருகத்தைக் காணலாம். அம்பாள் விமானத்துக்காக அமைக்கப்பட்ட இவ்விமானம் பல ஆண்டு களாக நிறைவெய்தப்பெருமலே உள்ளது. அடுத்து வடக்கு நோக்கிய விநாயகர்கோயில் உள்ளது. மேற்குப்பிராகாரத்தில் அழகிய சுந்தரவிநாயகரும், எழில்மிக்க ஆறுமுகப்பெருமானும் விளங்குகின்றனர். வலமாகவந்து இரண்டாம் கோபுரவாயிலைக் கடந்து உள்ளே சென்ருல் முதற்பிராகாரத்தில் கொடிமரத்தை யும் பெரிய சுதைநந்தியையும் காணலாம். நந்தி சுவாமீ சந்நிதியைவிட்டு விலகி உள்ளது.

இக்கோபுர வாயிலின் வெளிப்பக்கத்திலும் உட்பக்கத் திலும் துவார பாலகர்கள் உள்ளனர். கோபுரவாயிலுக்கு அருகே அணியொட்டிக்கால் மண்டபம் உள்ளது. இங்கு தலத்திருப்பதிகங்களின் கல்வெட்டுக்கள் உள்ளன. மலையின் அடிவாரத்தில் வடக்கு நோக்கிப் பாலசுப்பிரமணியர் விளங்கு கிருர். இவர் சந்நிதிக்கருகில் விசுவநாதர்கோயில் உள்ளது. படிக்கட்டின் இருபுறக் குடவறைகளிலும் விநாயகர் உள்ளார்

மலை இரண்டு விமான அமைப்பினை உடையது. தென்புற விமானத்தில் சோமாஸ்கந்தரும், வடபுறமுள்ள பிரதான விமானத்தில் கேடிலியப்பரும் எழுந்தருளி உள்ளனர். படி வழியாக மலைமீது ஏறியவுடன் சோமாஸ்கந்தர் காட்சிதருகிருர். சந்நிதியில் மகாமண்டபம் அழகிய சிற்பவேலைப்பாடுகளோடு காட்சிதருகிறது. இம்மண்டபத்தின்வடபால் கல்யாணசுந்தரரும், விநாயகரும், இத்தலத்தின் சிறப்பு மூர்த்தியாகிய பத்துத் திருக் கரங்களோடு கூடிய ஏகபாத நடராசரும் விளங்குகின்றனர். நடராசரைத் திருமால், திருமகள், பிரமன், கலைமகள், அகத்தியர் முதலியோர் தரிசிக்கின்றனர்.

வழிபட்டுச் சுவாமிகோயிலின் ஸ்நபன மண்டபத்தை அடையலாம். சுவாமி சுயம்புமூர்த்தி. ஆவுடையார் பெரியது. பாணம் மெல்லியது. நம் உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும் சந்நிதி விசேடத்தை அனுபவத்தில் உணரலாம். இம்மூர்த்தியை வழிபடின் நம் வினைகளும் இடர்களும் பிணிகளும் தொலையும்; சிவகதி கிடைக்கும் எனவும், கேடிலியப்பரெனத் திருநாமம் பூண்ட இப்பெருமானை வழிபடுவோர் கேடிலார் எனவும் தேவாரத் திருப்பாடல்கள் கூறுகின்றன. மலைமேல் ஒரு திருச் சுற்றுள்ளது. கேடிலியப்பரை வழிபட்டு, தேவநாதர் என வழங்கும் சோமாஸ்கந்தரைத் தரிசித்து மலையிலிருந்து கீழிறங்கிப் பிராகாரத்தில் வலம்வருவோம்.

முதற் பிராகாரத்தின் தென்புறத்தில் அறுபத்துமூவர், சமயாசாரியர், வக்ரமில்லாத நவக்கிரகங்கள், ஜுரதேவர் காட்சி தருகின்றனர். கன்னிமூலையில் பதரி (இலந்தை) விநாயகர் விளங்குகின்றார். இங்குள்ள தக்ஷிணமூர்த்தி திருவுருவம் மிகப் பழமையானது. மேல்மதிலில் துளசாஜி மன்னரும் ஆதி கட்டளைப்பிள்ளையும் உமைபாகரை வழிபடுவது தனியழகு உடையது. அடுத்து, தலமரம் இலந்தை உள்ளது. அகத்தியர், ஆளுங்கோவேஸ்வரர், விசுவநாதர், மகாலக்ஷ்மி கோயில்கள் உள்ளன. வடக்கே கைலாசநாதர், பிரகதீஸ்வரர், அண்ணாமலையார், ஜம்புகேசுவரர் முதலிய மூர்த்திகளின் கோயில்கள் உள்ளன. வடக்குப்பிராகாரத்தில் கிழக்குநோக்கி அம்பிகை தனிக்கோயிலுள்ளது. இத்தலத்தில் அம்பாள் சுவாமியின் இடப் பாகத்தில் விளங்கும் அமைப்புள்ளது. அடுத்து, சண்டேசுவரர் குபேரன் சோளீசுரர் காளத்திநாதர் காயாரோகணர் உள்ளனர். ஈசானத்திசையில் பத்திரகாளி அஞ்சுவட்டத்தம்மன் என்ற பெயரோடு விளங்குகின்றார். முருகப்பெருமானின் தவம் சிதையாமல் காத்தஅம்மை இவர். சுதைஉருவம். புனுகுசட்டம், சாம்பிராணித்தைலம் சாத்தப்படுகின்றன. எதிரே பலிபீடம். சந்நிதி விசேடமுடையது.

## மூர்த்திகள் :

சுந்தரவிநாயகர், பதரிவிநாயகர் என இரண்டு விநாயகர் விளங்குகின்றனர். சுவாமியின் திருப்பெயர் அருள்மிகு கேடிலியப்பர். வடமொழியில் அக்ஷயலிங்கம் என வழங்கப் படுகிறார். தேவாரத்தில் இவர்திருப்பெயர் குறிக்கப்படுகின்றது. அம்பாள் திருப்பெயர் அருள்மிகு வனமுலைநாயகி. வடமொழியில் சுந்தரகுஜாம்பாள் என வழங்குவர். முருகன், பத்திரகாளி, நடராசர் ஆகிய மூர்த்திகள் குறிப்பிடத்தக்க சிறப்பு உடையன.

தலமரம் இலந்தை. தீர்த்தம் சரவண தீர்த்தம்; முருகக் கடவுளால் தோற்றுவிக்கப்பட்டது. மற்றும் இந்திரதீர்த்தம், அக்கினிதீர்த்தம், சேஷதீர்த்தம், பிரமதீர்த்தம், சூரியதீர்த்தம், சந்திரதீர்த்தம் ஆகியனவும் உள்ளன.

## புராணவரலாறுகள்:

முருகன் வழிபட்டது :— முருகக்கடவுள் சூரபன்மனைக் கொன்ற கொலைப்பாவம்தீரத் திருச்செந்தூரில் சிவபெருமானை வழிபட்டார். பெருமான் திருக்கீழ்வேளூரில் தம்மைப்பூசிக்க

எனக்கூறினர். முருகப்பெருமான் மஞ்சாடிகோவில், கடம்ப னூர், ஆழியூர், இளங்கடம்பனூர், பெருங்கடம்பனூர், கடம்பர வாழ்க்கை, பட்டமங்கலம், தேவூர் முதலிய தலங்களில் பெருமானை வழிபட்டுக் கீழ்வேளூரை அடைந்து சிவபூஜை செய்தார். அவரைப்பற்றியிருந்த வீரகத்தி முருகனது தவத்துக்கு இடையூறு விளைத்தது. முருகன் அம்மையை வேண்டினர். அம்பிகை காளியாகி நான்குதிசை ஆகாயம் ஆகிய அஞ்சு வட்டங்களிலும் வீரகத்திவந்து முருகனைத் தொடராதவாறு காத்தருளினர். முருகப்பெருமான் வீரகத்தி நீங்கி இறையருள் பெற்றார். இறைவனருளியபடி முருகனும் காளியும் இத்தலத்தை வழிபடுபவர்களுக்கு வேண்டும்வரங்களை அளித்துவருகின்றனர்.

நாகாசுரனைக்கொன்ற கொலைப்பழிதீரத் திருமாலும், இழந்த படைத்தல் தொழிலைப்பெறப் பிரமனும், வசிட்டர்சாபம் நீங்க இந்திரனும், அவிர்ப்பாகத்தை அருவுருப்புடன்பெற்ற அக்கினி யும், மார்க்கண்டேயர்மீது காலபாசம் வீசிய குற்றம் நீங்க எமனும், விநாயகர்சாபம்தீரச் சந்திரனும்பூசித்துள்ளனர். மற்றும் பல புராணவரலாற்றுப் பெருமைகளையும் உடையது இத்தலம்.

ஆதிசேடன் கேடிலியப்பரை வணங்கி ஆண்மைபெற்றுள் ளான். திருமணக்கோலம் காண விழைந்த அகத்தியருக்கு இறைவன் இத்தலத்தில் உமையொருகூறனாய்க் காட்சிதந்தார். வசிட்டர் வழிபட்டு உடல்நலம்பெற்றுள்ளார். மார்க்கண்டேயர் சிரஞ்சீவித்தன்மைபெற வழிபட்டுள்ளார். தீயசெயல்புரிந்த துன்மதி, சிவகதி பெற்றுள்ளான். சந்திரகுப்தன் இழந்த செல்வங்களை அடைந்தான். சவ்வீரன் சாபம் நீங்கினன். விதுர்மன் தர்மஞ்ஞன் முதலியோர் வழிபட்டு நலம்பெற்றனர். சாபத்தால் கழுதையாகப் பிறந்த சிங்கத்துவசன் சாபநீக்கம் அடைந்துள்ளான். உற்பலாங்கி வைதவ்யம் நீங்கினள். ஆதி சைவர் ஒருவரது மனைவியின் கற்பைக்காத்தவர் இத்தலத்து இறைவர். முனிவர் ஒருவர் அறியாமல் நேர்ந்த பிழையால் ஆடாகப்பிறந்து இத்தலத்தில் பெருமானை வழிபட்டு நல்லருள் பெற்றுள்ளார்.

---

## சிவதரிசன பலன்

காலைதொழ அற்றைவினை கட்டகலும்; கட்டுச்சி
வேலைதொழ இப்பிறப்பில் வெந்துயர்போம்; – மாலையினில்
வந்துசிவன் தாளை வந்தித்தால் ஏழ்பிறப்பின்
வெந்துயரம் எல்லாம் விடும்.

கட்டுரை எண். 17.

# அபிராமி அந்தாதி

புலவர். திரு. K. சந்தானராமன், M A., B. Lit.,
D. P. P. A., D. U. N. I. U.,

**தண்ணளிக் கென்று முன்னே பலகோடி தவங்கள்செய்வார்
மண்ணளிக்கும் செல்வமோ பெறுவார்? மதிவானவர்தம்
விண்ணளிக்கும் செல்வமும் அழியா முத்திவீடுமன்றோ;
பண்ணளிக்கும் சொல் பரிமள யாமளைப்பைங்கிளியே! (15)**

**அ. பண்ணளிக்கும் சொல் பரிமள யாமளைப்பைங்கிளியே.**

(1) கேட்பவர்களுக்கு இன்னிசையின் இனிமையினை அளிக்கும், இயற்கை மணமுடைய பசிய நிறமுடைய கிளி போன்ற சியாமளாதேவியென அபிராமியினை அழைக்கிறார்.

(2) சியாமளநிறம் என்பது பசுமை கலந்த கருப்புநிறம். சியாமளநிறம் உடையவள் சியாமளா எனப்பட்டாள். சியாமளா என்பதே யாமளை என்றாயிற்று. 'சிம்லா' என்ற நகரின் பெயர்கூட சியாமளா என்பதன் திரிபே என்பர். இவளைக் குறித்து எழுதப் பட்டதே காளிதாஸனின் 'சியாமளாதண்டகம்' என்னும் இனிய தோத்திரநூலாகும். மரகதப்பச்சைநிறத்துடன் இவளே மதங்கர் குலத்தில் தோன்றியதால் 'மாதங்கி' எனவும் அழைக்கப்படு கின்றாள். வீணையுடன் காட்சிதரும் இவள் சங்கீதம் முதலிய நுண்கலைகளுக்கு அதிதேவதையாவாள்.

(3) அன்னை அனுஹதச் சக்கரத்தில் 'ராகினி' என்ற யோகினியாக எழுந்தருளும்பொழுது சியாமளநிறமும் இரண்டு முகங்களும் உடையவளாக சகஸ்ரநாமம் குறிப்பிடுகின்றது. 'ச்யாமாபா' — பசுமை கலந்த கருநிறமுடையவள் என்பது சகஸ்ரநாமம்.

(4) 'திவ்ய கந்தாட்யா' — தெய்வீகமணம் பொருந்தியவள் என்றும் சகஸ்ரநாமம் குறிப்பிடுகின்றது. இயற்கையாகவும்

நறுமணப் பொருள்களின்சேர்க்கையாலும் சியாமளா நறுமணம் பெற்று விளங்குகிருள்; எனவே பரிமள யாமளைப் பைங்கிளி என்றார்.

(5) மறையின் பரிமளமாய் இருப்பதாலும் தன்னடியார்களின் திறமையினை ஓங்கச்செய்து அவர்களின் நுண்கலை ஆற்றல் பரிமளித்துப் புகழ்மணம் பரவச்செய்வதாலும் அவள் பரிமளயாமளைப் பைங்கிளியாகிருள்.

(6) இனிய பண்களும் குழந்தைகளின் மழலையும் செவிக்கு இனிதாவதுபோல் அவளது பேச்சின் இனிமையும் கேட்பவர்களுக்கு இனிமையின்பம் பயக்கிறது. அதனுல் பண்ணளிக்கும் சொல் என்கிருர். அல்லது அவளது குரலினிமையினின்றே பண்கள் தோன்றின எனவும், நுண்கலைத் தெய்வமாகையால் இசைப்பண்களைப் பாதுகாக்கிருள் எனவும் கூறலாம்.

(7) 'நிஜ – ஸல்லாப – மாதுர்ய – விநிர்பத்ஸித – கச்சபி' – தனது பேச்சின் இனிமையால் கலைமகளின் 'கச்சபி' என்னும் பெயருடைய வீணையினை மதிப்பிழக்கச் செய்தவள் என்று சகஸ்ரநாமம் வருணிக்கிறது.

(8) இந்நாமத்தைக் கருப்பொருளாகவைத்து ஆதிசங்கரர் சௌந்தரிய லகரியில் ஒரு 'சுலோகம்' செய்தார்.

பேரரசியான அன்னையின் தர்பாரில் பலர் கூடியிருந்த சமயம் கலைமகள் தனது 'கச்சபி' வீணையில் அன்னை மகிழும் வண்ணம் புரமெரித்தது, காலனைக்கடிந்தது போன்ற இறைவனின் புகழையெல்லாம் இசையாய்வடித்து வழங்கினுள். தன் கணவனின் புகழினை இனிய வீணையில் இசைத்த கலைமகளைப் பாராட்டும் முகத்தால் அன்னை 'ஸபாஷ்' என்றுள். இந்தப் பாராட்டுவார்த்தையின் இனிமையில் 'ஸ' என்ற முதல் ஸ்வரம் வெளிப்பட்டது. அன்னையின் குரலிலிருந்துவந்த இனிமை சரஸ்வதியின் வீணை இசையினை மழுங்கச் செய்துவிட்டது. தனது வீணையின் இனிமை மழுங்கியதைக் கண்ட வாணி வெட்கித் தலைகுனிந்து வீணையினை இனி அன்னைக்குமுன் இசைக்கக்கூடாது எனத் தீர்மானித்து உறைக்குள் அடைத்துக் கொண்டாள். இவ்வாறு சங்கரர் வருணிக்கிருர்.

(9) அந்த அன்னையின் திருமுலைப்பாலுண்ட ஆளுடைய பிள்ளையாரின் பண்களைத் திருநீலகண்டயாழ்ப்பாணர் தனது யாழில் இசைக்க இயலாது யாழினை உடைக்கத் துணிந்தார் என்பது இங்கு ஒப்புநோக்கிச் சிந்திக்கத்தக்கது.

(10) அவ்வாறுகலைமகளின்வீணையினை அவமதிப்படையச் செய்ததிலிருந்து அன்னைக்கு "வீணா விதூஷிணி" அல்லது 'யாழைப்பழித்தமொழியாள்' எனப் பெயருண்டாயிற்று.

(11) பண்ணைவிட இனிய குரலுடைய அவளை "பண்ணின் நேர்மொழியாள் உமை" என அப்பரடிகளும் புகழ்கிறார். மறைக் காடர் அவளது குரலினிமை கேட்டு மகிழ்ந்திருக்கும் நிலையில் 'கதவம்' திறவாது காலம் தாழ்த்தக்கூடும் என்னும் குறிப்புத் தோன்ற அவர் பாடினார் என்பர்.

(12) அவளது குரலினிமை நோக்கிக் கம்பனும் "மழ விடையோன்பங்கில் உறையும்குயில்" என்றே குறிப்பிடுகிறான்.

(13) பரிமள யாமளையாக அன்னையினைத் தியானிக்க, அவளை வருணித்துப் புகழும் யாமள சாஸ்திரத்தில் திறமை எய்துவர் என்றும், வடநாட்டில் காளிதாஸனும், தென்னாட்டில் ஒட்டக்கூத்தனும் அத்தகைய திறமை எய்தினர் என்றும் கூறுவர்.

## ஆ. தண்ணளிக்கென்று......செல்வமோ பெறுவார்

(1) உனது குளிர்ந்த அருளினைக் குறித்து முற்பிறவிகளில் பலகோடி தவங்கள் செய்தோர் இப்புவியில் கிட்டும் அரசாட்சி முதலிய அற்ப செல்வங்களைமட்டுமோ பெறுவர்?

(2) பல பிறவிகள் எடுத்து அவற்றில் பல தெய்வங்களைப் பூஜித்த தவம் உடையவர்களுக்கே கடைசிப் பிறவியில் அன்னையினை வழிபடும் அரிய பேறுகிட்டும் என்பதும், அப்பிற வியும் நீங்கி வீடுபேறு எய்துவர் என்பதும் சாக்தர்களின் கருத்து.

(3) அவர்கள் இப்பிறவியில் அரசாட்சிமுதலிய அனைத்துப் பேறுகளும் பெறுவர். அதுமட்டுமன்று, வானுளும் வாய்ப்பும் முத்தியின்பமும் கிட்டும் என்பது "மண்ணளிக்கும் செல்வமோ பெறுவார்" என்ற வினாவின்பொருள்.

(4) மற்றும் மண்ணளிக்கும் செல்வத்தால் மயங்கி வீட்டின் பத்தை மறந்துவிடக்கூடாது என்ற எச்சரிக்கையும் தொனிக் கிறது. பொருள்முடிக்கும் போகத்தில்மயங்கினால் பலகோடிதவம் முயன்றதும் பயனற்றதாகிவிடும்.

(5) பிரமன் தன் மகன் தக்கனை அழைத்துத் தவமியற்றி வரும்படி கூறினன். அத்துடன் சிவபரம்பொருளை வேண்டி விண்ணளிக்கும் செல்வமும் முத்திவீடும் பெற்றுவரும்படியும் வலியுறுத்தினன். ஆனல்தக்கன் தவமியற்றித் தற்பரனைவேண்டி மண்ணளிக்கும் செல்வம் மட்டுமே பெற்றுவந்தான். அற்ப செல்வங்களைப் பெற்று வந்ததைக் கண்ட பிரமன்,

" மெய்ப்பொருள் பகர்ந்தேன் மைந்தன் வீடுபெற்று உய்ய
இப்பரிசானுன் அந்தோ ! என் இனிச் செய்கேன் ? "

என மிகவும் வருந்தினன் என்று கந்தபுராணம் காட்டுகிறது. அதாவது தண்ணளிக்கென்று புரியும் தவத்தின் நோக்கம் அழியா முத்திவீடு பெறுதலாக அமையவேண்டும் என்பது "மண்ணளிக்கும் செல்வமோ பெறுவார்" என்ற வினவின் உட்பொருளாகும்.

## இ. மதிவானவர் ...... முத்தி வீடுமன்றே

(1) பலகோடி தவங்கள் செய்வார் நின் தண்ணளியால் பெறுவது வானுலக இன்பமாகிய சொர்க்கபோகமும் அழியா முத்தி இன்பமும் ஆகும்.

(2) இகத்தில் எய்தும் செல்வங்களோடன்றிப் பரத்தில் வானுலகாளும் வாய்ப்பினையும் எய்துவர். தவஞ்செய்வாரின் 'பக்குவ' நிலைக்கேற்ப வானுலகாளும் செல்வத்தையும் முத்தியின்பத்தையும் அம்மை அளிப்பாள்.

(3) அழியா முத்திவீட்டினை அளிக்கவல்லவள், ஏன் இடையில் மண்ணளிக்கும் செல்வமும் விண்ணளிக்கும் செல்வமும் அளிக்கிருள் ? நேரே முத்தியளிக்க வேண்டியது தானே ? பிறவிகளில் செய்த நற்செயல்கள் அவற்றின் அளவுக்கேற்ப மண்ணளிக்கும் செல்வமும் விண்ணளிக்கும் செல்வமும் பெறக்காரணமாகின்றன. புண்ணியம் பாவம் என்னும் இருவினையும் இருக்கும்வரை பிறவியுண்டு. அழியாமுத்தியானந்தம்பெற, செய்யும் தவம் முதலிய புண்ணியச் செயல்களையும் வழிபடும் தெய்வத்துக்கே அர்ப்பணிக்கும் முதிர்ந்தஞானமுடையவர்க்கே நேரேமுத்தி கிட்டும். மற்றவர்கள் தவமுடையார்கள் எனினும் அவற்றினுக்கு ஏற்ற சொர்க்கவாழ்வு முதலியவற்றினை அநுபவித்த பின்னரே முத்தி எய்துவர்.

(4) கர்ணனுக்கு முத்தியின்பம் அளிக்கவிரும்பிய கண்ண பிரான் யுத்தகளத்தில்அவன்முன் யாசகனாகத்தோன்றி அவனது புண்ணியத்தினைப் பெற்றுக்கொள்கின்றான். அதன்நோக்கம் இதுவே:- அவனது புண்ணியச் செயல்கள் அவனை மீண்டும் பிறந்து நல்லனவற்றினை அநுபவிக்கக் காரணமாகி அழியா முத்தியானந்தத்தினைத் தடுத்துவிடும்.

அவளுக்கே அனைத்தும் அர்ப்பணம் என்ற எண்ணத்தில் தவமுயல்வார்க்குமட்டுமே நேரே முத்திகிட்டும். ஆகவேதான் மண்ணளிக்கும் செல்வம், விண்ணளிக்கும் செல்வம், அழியா முத்தியானந்தம் ஆகிய மூன்று நிலைகளைக் கூறுகிறார்.

(5) யாவரும் மதிக்கும் பதவியில் வாழ்வதாலும் மதிநுட்பம் உடைமையாலும் ' மதிவானவர் ' என்றார்.

(6) 'அன்னதா – உணவளிப்பவள்', 'வசுதா – செல்வங்கள் அளிப்பவள் ', ' ராஜ்யதாயினி – அரசினை அளிப்பவள் ' என சகஸ்ரநாமம் அவள் மண்ணளிக்கும் செல்வங்கள் தருவதை விளக்குகிறது.

" சொர்க்காபவர்க்க தாத்ரி – சொர்க்கமும் அபவர்க்க மென்னும் முத்தியும் அளிப்பவள் " என விண்ணளிக்கும் செல்வமும் அழியா முத்திவீடும் அருளுவதை ஒரே நாமாவில் இணைத்துக்கூறுகிறது. இங்கு 'சொர்க்கம்' என்பது புண்ணியஞ் செய்தவர் எய்தும் நல்வாழ்வான வானுலக இன்பத்தையும், ' அபவர்க்கம் ' என்பது முத்திநிலையினையும் குறிக்கிறது. சொர்க் கத்தில் வர்க்கப்பாகுபாடுகள் உண்டு. அவரவர் நல்வினைகளுக் கேற்ற அளவில் இன்ப அநுபவம் கிட்டுகிறது. மோட்சத்தில் வர்க்கப் பாகுபாடு இல்லை. பக்குவமெய்திய ஆன்மாக்கள் அனைத்தும் அழியா ஆனந்தநிலையில் – சாயுஜ்யநிலையில் இருக் கின்றன. உண்மையில் வர்க்கப் பாகுபாடு இல்லாத சமத்துவம் அங்குமட்டுந்தான் நிலவுகிறது. ஆகவே மோட்சநிலை வர்க்கப் பாகுபாடு இன்மையால் அதனை " அபவர்க்கம் " என்கிறது சகஸ்ரநாமம். அம்பிகை " அபவர்க்கதாத்ரி " அதாவது அழியா முத்திவீடு அளிப்பவள்.

யாமளை வடிவில் அன்னையினைத் தியானித்து இப்பாடலைப் பாராயணம் செய்பவர் இசைமுதலிய நுண்கலைகளில் தேர்ச்சி எய்துவர்.



# ஸ்ரீ குருஞானசம்பந்தர் நெறி விளக்கம்

## பிறவா வரம் தா

சிவமணி, புலவர் திரு. ம. சிவசம்பு பி. லிட்.
துணைச்செயலாளர், ஸ்ரீகுருஞானசம்பந்தர் பணிமன்றம், நெல்லை

இறந்தும் பிறந்தும் இளைத்தேன் இனியான்
மறந்தும் பிறவா வரம்தா — சிறந்தபுகழ்
ஞாலவா யாமுடிக்கு நாட்டுசூ ளாமணியாம்
ஆலவாய்ச் சொக்கநா தா. 10

எண்ணிலாத நெடுங்காலம் நாம், எண்ணிலாத பல பிறவிகளை எடுத்துக்கொண்டேவருகிறோம். ஞானநோக்கு உடையார்க்குப் பிறப்பதும், உடலைச் சுமப்பதும், இறப்பதும் பேரிழிவாகவும் துன்பமாகவும் தோன்றுகின்றன. பிறப்பு இறப்பு இல்லாதநிலையை அவர்கள் விரும்பி வரமாகவும் கேட்கிறார்கள். காரைக்கால் அம்மையார்,

"இறவாத இன்ப அன்பு வேண்டிப்பின்
வேண்டுகின்றார் ; பிறவாமை வேண்டும்"

என்கிறார். திருவள்ளுவர்,

"வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை"

என்கிறார்.

ஸ்ரீ குருஞானசம்பந்தர் மதுரையில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானிடம், 'பெருமானே! அடியேன் எத்தனையோ முறை இறந்தும் பிறந்தும் இளைத்துப்போனேன்; ஆகையால் இனி மறந்தும் பிறப்பு எடுக்கக்கூடாது; அதற்கு வரம்தரவேண்டும்' என்று கேட்டார்.

"இறந்தும் பிறந்தும் இளைத்தேன் இனியான்
மறந்தும் பிறவா வரம் தா"

என்பது அவர் பாடல். மாணிக்கவாசகர் "புல்லாகி........... தேவராய் எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன்" ஆதலால் இனிப் பிறவி வேண்டாம் என்கிறார்.

திருவாமூர் ஸ்ரீ திருநாவுக்கரசு சுவாமிகள் குருபூஜை விழாவில்



**ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள்**

கும்பகோணம் 'இசைநம்பி'

**திரு. ஜி. கல்யாணசுந்தர தேசிகர் அவர்களுக்கு**

பொன்னாடை போர்த்தி,

"திருமுறைக்கலாநிதி" பட்டம்வழங்கி, ரூ. 1001 நிதி அளித்து ஆசி அருளுதல்.

29 ... 4 ... 81

மதுரையில்

ஐந்தாவது உலகத்தமிழ் மாநாட்டைச் சிறப்பாக நடத்திய



தமிழக முதல்வர்

**மாண்புமிகு. எம். ஜி. இராமச்சந்திரன் அவர்களுக்கு**

திருச்சிராப்பள்ளித் தமிழ்ச்சங்கத்தின் சார்பில்

நிகழ்ந்த பாராட்டு விழாவில்,

**வித்துவான். ஸ்ரீமத். மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள்**

தருமை ஆதீனச்சார்பில்

பொன்னடை போர்த்தி ஆதீன வெளியீடுகளை வழங்குதல்

**24...5...81**

பிறந்தும் இறந்தும் இளைக்கின்ற நிலையைப் போக்க வழி என்ன ? போக்குபவர் யார் ? பிறப்போ பேதைமை உடையது ; அதைப் போக்கச் சிறப்பு என்னும் செம்பொருளைக் காண்பது தான் வழியாகும்.

" பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பது அறிவு ".

என்கிறார் திருவள்ளுவர்.

சிவபெருமான் ஒருவரே பிறப்பு இறப்பு இல்லாத நிலையைத் தருபவர். அவரே பிறப்பு இறப்பு இல்லாதவர். ஏனைய தேவர்கள் பிறப்பு இறப்புஉடையவர்கள். அவர்களிடம் பிறவா வரத்தைக் கேட்கலாமா ? கேட்டுத்தான் பயன் உண்டா ?

செத்துச் செத்துப்பிறக்கின்ற நிலை தெய்வநிலையாகுமா ? அந் நிலையைத் தெய்வநிலை என்று எண்ணுகின்ற மக்களைக்கண்டால் திருநாவுக்கரசுப் பெருமானுக்குப் பெருங்கோபம் வருகிறது. அக்கொடியவர் மனத்தைப் பாறையாக்கி, அம்மனப்பாறைக்கு நல்லுரை ஏறுமோ ? என்று கடிந்தருளுகின்றார்:

" செத்துச் செத்துப் பிறப்பதே தேவென்று
பத்தி செய்மனப் பாறைகட் கேறுமோ ? "

மாணிக்கவாசகர், சிவபெருமான் ஒருவரே பிறப்பு அறுக்கும் பிஞ்ஞகன் ; மாயப்பிறப்பு அறுக்கும் மன்னன் ; சிறந்து அடியார் சிந்தனையுள் தேன் ஊறிநின்று பிறந்த பிறப்பு அறுக்கும் எங்கள் பெருமான்; அவன் தில்லையுள் கூத்தன்; தென்பாண்டி நாட்டான் என்று விளக்கமாகக் கூறியுள்ளார்.

அத்தென்பாண்டி நாட்டானிடம் ஸ்ரீ குருஞானசம்பந்தர் பிறவா வரம் கேட்டார். அவரை, மீண்டும் பிறவாது மலர்த் தாள்சூட்டி ஆண்டார் மதுரைச்சொக்கநாதர். ஸ்ரீ குருஞான சம்பந்தப் பெருமானுக்குக் கேட்டது கிடைத்தது. அதைத் தெளிவாகக் கூறியுள்ளார். பாடலைப் படித்துப் பாருங்கள்.

" அடியேன் உனை வேண்ட அப்படியே என்றும்
கொடியேன் கருத்திசையக் கூறி — அடியேனை
மீண்டும் பிறவாதுன் விரைமலர்த்தாள் சூட்டிஎனை
ஆண்டவனே ! சொக்கநா தா ! 31

நாமும் மதுரைக்குச் செல்வோம்; பிறவா வரம் கேட்டு இன்புறுவோம்.

---

# சிந்திப்பதற்குச் சில உண்மைகள்

★ 10 லட்சம் மக்கட்தொகையினரைக் கொண்டதொரு நகரில், ஒரு மெகாடன் அணுகுண்டை வெடித்தால், உடனடியாக 3 லட்சம் பேர் மடிவர் ; அணுக்கதிர் வீச்சின் விளைவாக மேலும் 4 லட்சம் பேர் நடைப் பிணங்களாக்கப்படுவர்.

★ குண்டு வெடித்து ஒரு மணி நேரத்திற்குள்ளாக, அந்த நகரில் கதிர் வீச்சு பெரிதும் அதிகரிக்கும் ; புற்று நோயைக் குணப்படுத்துவதற்கெனப் பயன்படுத்தப்படும் சக்தி வாய்ந்த 'காமா'க் கதிரைப் போல, பற்பல லட்சம் மடங்கு கதிர்வீச்சு அந்த நகரில் நீடிக்கும்.

★ அணு ஆயுத யுத்தம் வெடிக்குமானால், 20 கோடிபேர் செத்து மடிவர் ; மேலும் 6 கோடி பேர் முடமாக்கப் படுவர்.

★ அமெரிக்க நிபுணர்களின் கணக்கீட்டின்படி, யுத்தம் வெடித்தால், 10,000 மெகாடன் அணு ஆயுதங்கள் பயன்படுத்தப்படும் ; அது வாயு மண்டலத்தின் 'ஓஸோன்' படலத்தை 30 அல்லது 40 சதவிகிதம் குறைத்துவிடும் ; அதன் விளைவாக, புற ஊதாக் கதிரியக்கம் பெரிதும் அதிகரித்துப் பூமியிலுள்ள தாவரங்களையும், பிராணிகளையும் அழித்துவிடும்.

★ ஒரு அணு ஆயுத குண்டு வீசுகிற விமானத்தை உருவாக்குவதற்கு 8.5 கோடி டாலர் செலவாகிறது ; ஆனால், உலகிலிருந்தே அம்மை நோயை அடியோடு ஒழிப்பதற்குத் தேவையான பணம் 8.3 கோடி டாலர்கள்தான்!

★ இன்றைய தினம் வளரும் நாடுகளில் 40 கோடி பேர் அரைப்பட்டினி, கால் பட்டினியால் வாடுகின்றனர் ; 30 கோடி பேர் இரத்த சோகைக்கு ஆளாகியுள்ளனர் ; 10 கோடிக் குழந்தைகள் சத்துணவின்றி வதங்கிக் கிடக்கின்றனர்.

ஆனால்,

ஆயுத உற்பத்திக்குத் தினசரி செலவிடப்படும் தொகை 100 கோடி டாலர்களுக்கும் அதிகமாகும்!

29—4—1981 — தொகுப்பு : ஏ. எஸ். மூர்த்தி


ISSUED BY

Information Branch of the Ussr Consulate General in Madras, 115, Theagaraya Road, T - Nagar, Madras - 600 017

# அறுகம்புல்

திரு. எஸ். சுவாமிநாதன்

இறைவனைப் பூசைசெய்யுங்கால் அபிடேகம் முதலியவை முடித்து, இறைவன் பெயர்களைச் சொல்லி, ஒரு பெயருக்கு ஒரு மலர் வீதம் சாத்துவது முறை. இறைவனின் ஒவ்வொரு மூர்த்தத்திற்கும் ஒருவகை மலர் சிறப்பாகக் கொள்ளப்படுகிறது. சிவபெருமானுக்கு வில்வமும் தும்பைப் பூவும் சிறப்பானவை. திருமாலுக்கு, திருத்துழாய் உகந்தது. விநாயகப் பெருமானுக்கு அறுகம்புல் உகந்தது. இவைகளெல்லாம், மருத்துவத்திலும் மிக்க உபயோகமுள்ளன.

விநாயகப் பெருமானுக்கு அறுகம்புல் மிகச் சிறந்ததாகக் கொள்ளப்படுவதற்குப் புராண வரலாறுகள் உள்ளன.

கௌண்டின்ய முனிவர் என்பவர் விநாயகப் பெருமானிடம் மிக்க பத்தி உள்ளவர். அவர் எப்பொழுதும் அறுகம் புல்லையே பெருமான் பூசையில் உபயோகித்து வந்தார். எவ்வளவோ நறுமணம் உள்ள மலர்கள் இருந்தபோதிலும், அவைகளை எல்லாம் விட்டுவிட்டு, மிகச்சாதாரணமான அறுகம் புல்லையே அவர் உபயோகப்படுத்தியது அவர் மனைவிக்கு மிக்க வியப்பாக இருந்தது. அதற்குக் காரணத்தை அவள் அறிய விரும்பினள். முனிவர் அவளுக்கு அறுகம்புல்லின் பெருமையைப் புலப்படுத்தப் புராண வரலாற்றைக் கூறலானர்.

அனலாசுரன் என்ற அரக்கன் எப்போதும் மிகக் கடுமையான வெப்பத்தை வெளிப்படுத்தி வந்தான். அதனல், அனைத்து உலகங்களும் அவதியுற்றன. ஆகையால், விண்ணுலகத்தேவர்கள், திருமாலிடம் முறையிட்டார்கள். திருமால் அவர்களை விநாயகப் பெருமானிடம் முறையிடும்படி சொன்னர். விநாயகப் பெருமான் மும்மூர்த்திகளுக்கும் மேம்பட்டவர் என்றும், அவரால்தான் அனலாசுரன் கொடுமையை அகற்ற முடியும் என்றும் அவர்களுக்குச்சொன்னர். தேவர்கள் விநாயகப் பெருமானை அணுகவே அவர், தாம் ஒரு சிறுவன் உருவம் தரித்து ஒரு இருடி பர்ணசாலையில் வந்திருப்பதாகவும் அவ்வரக்கனை அங்கு அனுப்புவிக்க வேண்டுமென்றும் சொல்லி

வருளினர். தேவர்கள், அரக்கனிடம் சென்று அவனுடைய மேனி அழகை மிகவும் புகழ்ந்ததோடு அவனைக் காட்டிலும் சிறந்த உருவமுள்ள ஒரு சிறுவன் இருடி பர்ணசாலையில் இருப்பதாகவும் சொன்னார்கள். இதைக் கேட்டுப் பொறுமையுற்ற அவன் பர்ணசாலைக்குச் சென்றான். அவனைப் பார்த்த இருடிகள் அனைவரும் பயந்து ஓடினார்கள். பர்ணசாலையில் இருந்த சிறுவனையும் ஓடும்படி எச்சரித்தார்கள். ஆனால் சிறுவன் அகலவில்லை. அரக்கன் அங்கு வந்தவுடன் விநாயகப் பெருமான் அவனை விழுங்கிவிட்டார். பெருமானுடைய உதரத்தில் அனைத்து உலகங்களும் உள்ளமையால், அவ்வரக்கனுடைய வெப்பம் அவைகளைக் கடுமையாகத் தாக்கியது. அவ்வெப்பத்தைத் தணிக்கப் பல முயற்சிகள் செய்யப்பட்டும் பலனளிக்கவில்லை, பிறகு, வேத வல்லுனர்களான எண்ணாயிரம் இருடிகள் ஒவ்வொருவரும் இருபத்தொரு அறுகம்புற்களால், பெருமானைப் பூசித்தனர். உடனே வெப்பம் மறைந்தது. பெருமானும் மகிழ்ச்சியுற்றுத் தன்னை ஒரே ஒரு அறுகம்புல்லால் பூசித்தாலும், தான் மிக்க மகிழ்ச்சி அடைவதாகவும் அப்பூசை மற்ற எல்லா விதமான வழிபாடுகளைக்காட்டிலும் மேம்பட்டதாகும் என்றும் அருளினர்.

மேலும், கௌண்டின்ய முனிவர், மற்றொரு வரலாற்றையும் தன் மனைவிக்குச் சொன்னார்.

ஒரு சமயம், நாரத முனிவர், விநாயகப் பெருமானைப் பணிந்து தான் சனக சக்கரவர்த்தியிடம், அவருடைய பெருமைகள் எல்லாவற்றிற்கும் விநாயகப் பெருமானின் திருவருளே காரணம் என்று சொன்னதாகவும், அதை அச்சக்கரவர்த்தி ஏற்க மறுத்து அப்பெருமைகளுக்கெல்லாம், தான் தனக்கு விதிக்கப்பட்ட நற் செயல்களை எல்லாம் ஒழுங்காகவும் தவறாமலும் நிறைவேற்றி வருவதே காரணம் என்று சொன்னதாகவும் பெருமானிடம் விண்ணப்பித்தார். விநாயகப்பெருமான் ஒரு வயது முதிர்ந்த அந்தணர் உருவம் தாங்கி அச்சக்கரவர்த்தியிடம் சென்று உணவு யாசித்தார். சக்கரவர்த்தி எவ்வளவோ வகையான சிறப்பான உணவுகளை எல்லாம் பெருமானுக்கு வழங்கியும் அந்தணர் பசி தணியவில்லை. அச்சக்கரவர்த்தியை அந்தணர் தம் பசியைத் தணிக்கக் கூடாமைக்காக எள்ளினர். பிறகு அந்தணர், விரோசன திருசிரஸ் என்ற தம்பதியர்களிடம் சென்று உணவு கேட்க அவர்கள், விநாயகப் பெருமானைப் பூசித்த ஒரு அறுகம் புல்லை அளித்தார்கள். அதை உண்டதும், அந்தணர் பசி தீர்ந்தது. சனக சக்கரவர்த்தியும் ஏனையோரும் இதனால், அறுகம் புல்லின் பெருமையை உணர்ந்து கொண்டார்கள்.

பிறகு கௌண்டின்ய முனிவர், தம் மனைவியை விநாயகப் பெருமானைப் பூசித்த ஒரு அறுகம் புல்லுடன் தேவேந்திரனிடம் அனுப்பி அப்புல்லுக்குச் சமமான எடையுள்ள தங்கம் கொடுக்கும்படிக் கேட்கச்சொன்னார். தேவேந்திரனுக்கு அப்புல்லின் பெருமை தெரிந்திருந்ததால் முனிவர் மனைவியைக் குபேரனிடம் அனுப்பினான். அப்புல்லின் பெருமையை அறியாத குபேரன், அதை மிக அற்பமாக எண்ணி எடைபோடலானான். ஆனால் அவனுடைய பொருள்கள் யாவும், எட்டுத்திசைக் காவலர்களும் மூவரும் கூட அப்புல்லின் எடைக்கு நிகராகவில்லை.

ஆகையால் அனைவரும், கௌண்டின்ய முனிவரிடமே சென்றனர். அம்முனிவர், அவ்வறுகம்புல் விநாயகப் பெருமானின் பூசையில் உபயோகப்படுத்தியதாதலால், அது அளவற்ற மேன்மையுடையது என்று அவர்களுக்கு விளக்கினார்.

தென்னாட்டில், ஜம்பா என்ற ஒரு நகரம் இருந்தது. அதை சுலபன் என்ற அரசன் ஆண்டுவந்தான். அவனது மனைவி சுமுத்திரை. அவர்கள் இருவரும் ஒவ்வொருநாளும் புராணங்களைக் கேட்பதுவழக்கம். ஒருநாள் ஒரு ஏழையந்தணன் தன் உடலைச் சரியாக மறைக்கும் அளவிற்குக்கூடத் துணி உடுத்த வழியின்றி ஒரு சிறு கந்தலை உடுத்திக்கொண்டு புராணம்கேட்க வந்தான். அரசன் அவனைப்பார்த்து எள்ளி நகையாடினான். தன் பற்கள் எல்லாம் தெரியும்படியாக நகைத்ததால் அவ்வரசனை ஒரு எருதாகப் போகுமாறு அந்தணன் சபித்தான். அரசன்மனைவி கோபமுற்று அந்தணனை ஒரு கழுதையாகும்படிச் சபித்தாள். அந்தணன் அவளைப் புல்சேகரிக்கும் ஒரு ஏழைப் பெண்ணாகும்படிச்சபித்தான். அவ்வாறு சபிக்கப்பட்ட அரசி ஒருநாள் புல்லைச் சேகரித்தபோது மழை வந்ததால், புல்லை வைக்க வேறு இடம் கிடைக்காமல், ஒரு விநாயகர் கோயிலில் புல்கற்றையை வைத்தாள். அப்போது சாபத்தால் எருதான அரசனும், கழுதையான அந்தணனும் மழைக்கு அக்கோயிலில் ஒதுங்கினார்கள். எருதும் கழுதையும் அங்கிருந்த புல்கற்றையில் உள்ள புல்லைப் புசித்தன. அதுசமயம் திடீர் என்று ஒரு பெருங்காற்று வீசியபடியால், கழுதையாலும் எருதாலும் அவிழ்க்கப்பட்டிருந்த அப்புல்கற்றையிலிருந்து ஒரு அறுகம்புல் கோவிலில் வீற்றிருந்த விநாயகப் பெருமான் திருவுருவத்தின்மேல் விழுந்தது. அன்று விநாயக சதுர்த்தி விசேடநாள்.

அவ்வாலயத்தில் கூடியிருந்த பக்தர்கள், புல்கற்றைக்காரியையும், எருதையும், கழுதையையும் திருக்கோவிலை

விட்டுத் துரத்தினர்கள், ஆனல், அவளும் அம்மிருகங்களும் கோவிலைச் சுற்றிச்சுற்றியே ஓடிக்கொண்டிருந்தன. அப்போது விநாயகப் பெருமான் அம்மூவர்களுக்கும் மிக உயர்ந்த வடிவங்களைக் கொடுத்து ஒரு சிறந்த தேவ விமானத்தில் அம் மூவரையும் ஏறச்செய்து தன்னுடைய உலகத்தில் சேர்த்துக் கொண்டார். இதைக்கண்ட சில சித்தர்கள் பெருமானுடைய கணங்களை விசாரிக்க அவர்கள், அந்நிகழ்ச்சிக்குக் காரணத்தைத் தெரிவித்தார்கள். விநாயக சதுர்த்தியன்று அம்மூவரும் உணவின்றி இருந்தமையாலும், கோவிலைச் சுற்றி வந்தமையாலும் எருதும், கழுதையும் புல்கற்றையை அவிழ்த்தபோது காற்றினல் அறுகம்புல் பெருமான்மீது பறந்து விழுந்ததாலும், அக்கற்றையை அவிழ்த்த அம்மிருகங்களுக்கும், அக்கற்றையைச் சேகரித்திருந்த அப் பெண்மணிக்கும் பெரிய புண்ணிய பலன் ஏற்பட்டதாலும், பெருமான் அவர்களுக்கு உயர்ந்த நற்கதியை அளித்தார் என்று கூறினர்கள்.

இப்புண்ணியங்களை அவர்கள் அறியாமலேயே செய்திருந்த போதிலும். பெருமான் அவர்களுக்குச் சிறப்பான நல்ல கதியை அளித்தார்.

ஆகையால், அறுகம்புல் விநாயகப் பெருமான் பூசைக்கு மிக உகந்தது - பெரும் புண்ணியத்தையும், நற்கதியையும் அளிக்கக் கூடியது. 21 அறுகம்புற்களைப் பூசையில் உபயோகப் படுத்த வேண்டும்.

அறுகம்புல், அருள்மிகு நடராசப் பெருமான் திருச் சடையிலும் உள்ளது. வள்ளலார் இராமலிங்க சுவாமிகள், அடியிற் கண்ட அற்புதமான செய்யுளில் இதை உணர்த்தியிருக்கிருர்:

" தேவர்க்கரிய வானந்தத் திருத்தாண் டவஞ்செய் பெருமானீர்
மேவக் குகுகுகுகுகு வேணியுடையீரா மென்றேன்
தாவக் குகுகுகுகுகுகு த்தாமே யைந்து விளங்க வணி
யேவற் குணத்தா யெல்க்கரு ரிதுதான் சேடி யென்னேடி "

நடராசப் பெருமான திருச்சடையில் உள்ள அறுகம்புல் பெருமானின் அனைத்தும் உலர்ந்த தன்மையைக் குறிக்கும் என்பர்.

# செய்திகள்

## ஆயில்யத் திருநாள் ஆலய வழிபாடு

**திருக்கடவூரில் :**

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் ஆண்டு ஜன்ம நட்சத்திர ஆயில்யத்திருநாள் வழிபாடு திருக்கடவூர் ஸ்ரீ அமிர்தகடேசுவர சுவாமி திருக்கோயிலில் மிருத்யுஞ்சய ஹோமம், ஏகாதச ருத்ரஜபம் முதலியவற்றுடன் 11--5--81 அன்று சிறப்பாக நடைபெற்றது. ஸ்ரீ அமிர்தகடேசுவர சுவாமி, ஸ்ரீ அபிராமி அம்மை ஆகிய மூர்த்திகளுக்கு விசேஷ அபிஷேக ஆராதனைகளும் அர்ச்சனையும் ஸ்ரீ காலசம்கார மூர்த்திக்கு, சகஸ்ரநாம அர்ச்சனையும் நடைபெற்றன. ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் எழுந்தருளி வழிபாடாற்றி, ஜன்ம நட்சத்திர விழாமலர் - சிவப்பிரகாசம் என்றநூலை வெளியிட்டு அன்பர்கட்குப் பிரசாதம் வழங்கி ஆசியருளினார்கள்.

**திருக்கோயில்களில் :**

1. மாதந்தோறும் நடைபெறுவதுபோல் ஆயில்யத்திருநாள் வழிபாடு, திருச்சிக்கல் அருள்மிகு நவநீதேசுவரர் திருக்கோயிலிலும், திருக்கீழ்வேளூர் அருள்மிகு கேடிலியப்பர் திருக்கோயிலிலும் 11-5-81 அன்று சிறப்பாக நடைபெற்றது. சுவாமி, அம்பாளுக்கு விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடைபெற்றன. தலத்திருப்பதிகம் பாராயணம் செய்யப்பெற்றது. தலத்திருப்பதிக நூல்வெளியீடு செய்யப்பெற்று அன்பர்கட்கு வழங்கப்பட்டது. வித்துவான் திரு. வி. சா. குருசாமி தேசிகர், ஆதீன அடியவர் திரு. நெல்லையப்ப சுவாமிகள் ஆகியோர் சமயச் சிந்தனையுரை வழங்கினர். அன்பர் பலர் கலந்துகொண்டு வழிபட்டுப் பயன்பெற்றனர்.

2. வைகாசி ஜன்மநட்சத்திர விழா இம்மாதம் 25ம் நாள் (7--6--81) ஞாயிற்றுக் கிழமை திருத்தேவூர் அருள்மிகு தேவபுரீசுவரர் ஆலயத்திலும், திருப்பள்ளியின் முக்கூடல் அருள்மிகு

முக்கோணநாதர் ஆலயத்திலும் நடைபெற்றது. சுவாமி அம்பாளுக்கு விசேஷ அபிஷேக ஆராதனைகளும் தலத்திருப்பதிக பாராயணமும்நிகழ்ந்தன. அச்சிட்ட தலத்திருப்பதிக வெளியீடு அன்பர்களுக்குவழங்கப்பெற்றது. வித்துவான் திரு. மு. இரத்தின தேசிகர், வித்துவான் திரு. வி. சா. குருசாமி தேசிகர், ஆதீன அடியவர் திரு. நெல்லையப்ப சுவாமிகள் ஆகியோர் சமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினர்.

தருமையாதீனத்தில்

## ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக்கோயில் பெருவிழா

தருமையாதீனத்து முதற்குரவர் ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் ஜீவ சமாதி எய்திய திருக்கோயிலாகிய ஸ்ரீ ஞானபுரீசுவரர் ஆலயத்தில் 15—5—81 அன்று தொடங்கிப் பெருவிழா நிகழ்வுற்றது. நாள்தோறும் பஞ்சமூர்த்திகள் திருவீதியுலாக் காட்சி நடைபெற்றது. திருவீதியுலாவின்போது ஆதீன வேதசிவாகம பாடசாலை, தேவாரபாடசாலை ஆசிரியர்களும் மாணவர்களும் ஆதீன தேவஸ்தான ஓதுவாமூர்த்திகளும் வேத பாராயணமும் திருமுறைப் பாராயணமும் நிகழ்த்தினார்கள். அன்பர் பலர் தரிசித்து இன்புற்றனர்.

### குருபூஜைப் பெருவிழா:

தருமையாதீனக் குருமுதல்வர் ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள் குருபூஜைப் பெருவிழா 24—5—81 ஞாயிறன்று மிகச்சிறப்பாக நடைபெற்றது. காலை ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள், ஸ்ரீ ஆனந்தபரவசர் பூங்காவிலுள்ள குருமூர்த்தங்களை வழிபட்டு நண்பகல் ஆன்மார்த்த மூர்த்தி ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானுக்கு விசேஷ அபிஷேக ஆராதனை செய்தருளினார்கள். திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீமத் காசிவாசி சுவாமிகள் வழிபாட்டிற் கலந்துகொண்டு திருவருட்பிரசாதம் பெற்று மகிழ்ந்தார்கள். நண்பகல் ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக்கோயிலில் விசேஷ அபிஷேகங்களும் பஞ்சமுகார்ச்சனையும் நவசக்தி அர்ச்சனை ஆகியவையும் சிறப்பாக நடைபெற்றன. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளியிருந்து வழிபாடாற்றி, வழிபாட்டிற்கு வந்திருந்த அன்பர்கட்கு அருட்பிரசாதம் வழங்கியருளினார்கள். குருபூஜை விழா மலராக "ஸ்ரீ குருஞானசம்பந்தர் அட்டகம்" என்னும் அருள் நூல் வெளியிடப்பெற்றது. ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக்கோயில்

வழிபாடு முடிந்தபின் நண்பகல் மாகேஸ்வர பூஜை நடை பெற்றது.

## குருமூர்த்த தரிசனம் :

குருபூஜைத் திருநாள் 24—5—81 அன்று ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் மாலை 6 மணி அளவில் நாதசுர இன்னிசை முழக்கத்துடன் திருமஞ்சன வீதியில் அமைந்திருக்கும் குரு மூர்த்தங்களைத் தரிசித்து வழிபாடாற்ற எழுந்தருளினார்கள். குருமூர்த்த வழிபாட்டின்போது ஒவ்வொரு குருமூர்த்தத்திலும் அருள் வரலாறு கூறப்பட்டது. வழிபாட்டிற்குப்பிறகு ஸ்ரீ ஞான புரீசுவரர், ஸ்ரீ தருமபுரீசுவரர், ஸ்ரீ அஷ்டாதசபுஜ மகாலட்சுமி துர்க்காதேவி திருக்கோயில்களில் வழிபாடாற்றித் திருமடத் திற்கு எழுந்தருளினார்கள். ஸ்ரீ சொக்கநாதப் பெருமானுக்கு, குருபூஜைத்திருநாளில் நிகழ்த்தப்பெறுகின்ற சிறப்பு வழிபாடு கள் திருமெய்ஞ்ஞான நிவேதனத்துடன் நிகழ்த்தப்பெற்றன. வழிபாட்டிற்குப் பின் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் திருக்கொலு வீற்றிருந்து அருட்காட்சி வழங்கியருளினார்கள். ஸ்ரீமத் காசிவாசி சுவாமிகள் கொலுவழிபாடு நிகழ்த்தினார்கள் திருக்கூட்டத்து அடியவர்களும் அறிஞர்பெருமக்களும் தரிசித்து அருட்பிரசாதம் பெற்றுய்ந்தனர்.

## பட்டினப்பிரவேசம் :

25—5—81 திங்கட்கிழமையன்று பட்டினப்பிரவேசத்திரு நாள். அன்று காலை ஸ்ரீ சொக்கநாதப் பெருமானுக்கு விசேஷ அபிஷேக ஆராதனைகள் நிகழ்வுற்றன. நண்பகல் மாகேசுவர பூஜை நடைபெற்றது. இரவு தருமையாதீன இசைப்புலவர் சீகாழி எஸ். கோவிந்தராஜன் குழுவினரின் இன்னிசையரங்கு நிகழ்வுற்றது. பிறகு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் சிவிகையில் எழுந்தருளித் திருவுலாக் காட்சி தந்தருளினார்கள். ஸ்ரீமத் காசிவாசி சுவாமிகளும் திருக்கூட்டத்து அடியவர்களும் அன்பர்களும் உடன்வரத் திருவுலாக்காட்சி நடைபெற்றது. திரு. ஏ. கே. சி. நடராஜன் முதலியோரின் குழலிசை மங்கல இன்னிசையும் திருமுறை இன்னிசையும் முழங்க வீதியுலாக் காட்சி நிகழ்ந்தது. தருமைத் திருவீதிகளில் அன்பர்கள் பூரண கும்பங்கள் வைத்து ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களை வழி பட்டு அருட்பிரசாதம் பெற்றனர். திருவுலாக்காட்சி நிறை வெய்தியதும் திருக்கொலுக் காட்சி நடைபெற்றது. அன்பர் கட்கு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் ஆசியருளி, அருட் பிரசாதம் வழங்கினார்கள்.

## திருநெறிய தெய்வத் தமிழ் மாநாடு :

தருமையாதீனக் குருமுதல்வர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் குருபூஜைப் பெருவிழாவை ஒட்டி 15—5—81 முதல் 25—5—81 முடிய, திருநெறிய தெய்வத்தமிழ் மன்றத்தில் நாள்தோறும் மாலை 7 மணியளவில் மாநாடு நிகழ்வுற்றது.

மாநாட்டின் முதல்நாளன்று மதுரை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் வாழ்த்துரை வழங்கி விழாவினைத் தொடங்கி வைத்தார்கள். 22ந்தேதி நடைபெற்ற பட்டிமண்டபத்திற்கு தவத்திரு குன்றக்குடி மகாசந்நிதானம் அவர்கள் நடுவர் பொறுப்பேற்று மிக நல்ல தீர்ப்பினை வழங்கினார்கள். 23ந்தேதி காஞ்சிபுரம் ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் வாழ்த்துரை வழங்கினார்கள். மாநாட்டில் மகாவித்துவான் திரு ச. தண்டபாணி தேசிகர், மகாவித்துவான் திரு. சி. அருணைவடிவேல் முதலியார், திரு. ஔவை. து நடராஜன், திரு. கி. ஆ. பெ. விசுவநாதன், திரு. சி. பாலசுப்பிரமணியம், மாயூரம் கோட்டாட்சியர் செல்வி. எம். பி. நிர்மலா, திருக்குறளார் திரு. வீ. முனுசாமி, திரு. கி. வா. ஜகந்நாதன், திரு. க. வச்சிரவேல் முதலியார், திரு. பி. டி. ஆர். க. தியாகராஜன், திரு. ப. நெடுமாறன், எம். எல். ஏ போன்ற அறிஞர்கள் பலரும் கலந்து கொண்டு சிறப்புரை ஆற்றினார்கள். பதினொரு நாட்களிலும் கவியரங்கம், இலக்கியப் பேருரை, கருத்தரங்கம், பட்டிமண்டபம், சிந்தனைமேடை, வினா விடை அரங்கம், வழக்காடு மன்றம் எனப் பல்வகை நிகழ்ச்சிகள் அமையப்பெற்றுக் கேட்போர் செவிக்குத் தேனாய் அமைந்தது. மேலும் ஒவ்வொரு நாளும் இரவு 9-30 அளவில் இன்னிசை நிகழ்ச்சி நடைபெற்றது. தஞ்சை திருமதி டி. ஆர். கமலாமூர்த்தி குழுவினர், காட்டூர் திரு. இராஜசேகரன் குழுவினர், திரு. கழுகுமலை ஏ. கந்தசாமி குழுவினர், குடந்தை திருமதி. வி. பி. இராஜேஸ்வரி குழுவினர் போன்ற சிறந்த அறிஞர்களால் இன்னிசை நிகழ்ச்சிகள் நடைபெற்றன. 18—5—81 அன்று தருமபுரம் ஸ்ரீ குருஞானசம்பந்தர் தொடக்கப்பள்ளி மாணவ மாணவியர் நிகழ்த்திய பல்சுவைநிகழ்ச்சியும், 19—5—81உ அன்று தருமபுரம் ஸ்ரீ குருஞானசம்பந்தர் உயர்நிலைப்பள்ளி மாணவ மாணவியர் நிகழ்த்திய கலைநிகழ்ச்சியும், 21—5—81உ அன்று திருக்கல்யாண உற்சவத்தை முன்னிட்டு மாயூரம் ஸ்ரீ கணநாதர் பொம்மை நாடக சபையினரின் பொம்மலாட்ட நிகழ்ச்சியும், 23—5—81 அன்று சீகாழி திருஞானசம்பந்தம், திருச்சி. திரு. முத்துக்கந்தசாமி ஆகியோர் வழங்கிய திருமுறை இசை நிகழ்ச்சியும், 24—5—81உ அன்று கோவை திரு. கா. தி. அரங்கநாதன்

குழுவினர் நிகழ்த்திய "ஸ்ரீ குருஞானசம்பந்தர்" வில்லுப்பாட்டு நிகழ்ச்சியும் சிறப்பாக நடைபெற்றன.

**சமயப்பயிற்சி வகுப்பு :**

குருபூஜை விழாவை முன்னிட்டு 10—5—81 முதல் 25—5—81 முடிய 15 நாட்கள் சமயப்பயிற்சி வகுப்பு நடைபெற்றது. வகுப்பினைத் தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் ஆசியுரை வழங்கித் தொடங்கி வைத்தார்கள். மாயூரம் கோட்டாட்சியர் செல்வி. எம். பி. நிர்மலா, எம். ஏ., அவர்கள் தொடக்கவுரை நிகழ்த்தினர்கள். காலை, மாலை இருவேளைகளிலும் வகுப்புக்கள் நடைபெற்றன. சிவஞானபோதம், சிவப்பிரகாசம், திருவுந்தியார், திருவருட்பயன் என்னும் சாத்திர நூல்களும் வேதம், ஆகமம், புராணம், உபநிடதம், நீதிநூல்கள், சிவபோகசாரம், சொக்கநாதவெண்பா, தமிழ் மருத்துவம், கல்வெட்டுகள், பக்திஇலக்கியம், புராண இலக்கியம், சமய இலக்கியம், வைணவ இலக்கியம் என்ற தலைப்புகளில் பல்வேறு பாடங்களும் நடத்தப் பெற்றன. சமயப்பயிற்சி வகுப்பில் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் வந்திருந்த அறுபதின்மர் பயின்றனர். காலை 6 மணியளவில் யோகாசனப் பயிற்சியும், காலை 8 மணியளவில் திருக்கோயில் வழிபாடும் வகுப்பின் அங்கமாக நடைபெற்றன. 25—5—81 அன்று மாலை 4 மணியளவில் அன்றுசிறப்புரை நிகழ்த்தியதிரு. ப. நெடுமாறன் அவர்கள் சமயப்பயிற்சி பெற்றமாணவர்கட்குச் சான்றிதழ் வழங்கினர்கள். சமயப்பயிற்சியாளர்கட்கு ஆதீனத்தில் உணவு, உறையுள் முதலிய வசதிகள் செய்து கொடுக்கப்பட்டன.

## திருஞானசம்பந்தர் திருக்கல்யாண விழா

தருமையாதீனத்திற்குச் சொந்தமான ஆச்சாள்புரம் என வழங்கும் திருப்பெருமணநல்லூர் ஸ்ரீ சிவலோகத் தியாகராஜ சுவாமி ஆலயத்தில் ஸ்ரீ திருஞானசம்பந்தர் திருக்கல்யாண விழாவும், சிவஜோதி தரிசனமும், தேவஸ்தானத்தின் தேவார வகுப்பு ஆண்டு விழாவும் 21—5—81 அன்று சிறப்பாக நடைபெற்றன. சென்னை 'திருக்கோயில்' ஆசிரியர் திரு. ந. ரா. முருகவேள், எம். ஏ., எம். ஓ. எல். அவர்கள் 'திருஞானசம்பந்தர் திருமணம்' என்ற தலைப்பில் சொற்பொழிவாற்றி, தேவார வகுப்பு மாணவர்கட்குப் பரிசு வழங்கினர்கள். அன்பர் பலர் விழாவிற் கலந்துகொண்டு இறையருள் பெற்றனர்.

---




**ஜோதிஷம் திரு. A. இராசமாணிக்கம்**

ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் நடுநிலைப்பள்ளி, திருப்பனந்தாள்.

( துன்மதிஸு ஆனிமீ 1உ முதல் 31உ முடிய

(15—6—81 முதல் 15—7—81 முடிய)

ஸ்ரீ துன்மதி ஸு வைகாசி மீ 32 உ பானுவாரம் விசாக நக்ஷத்திரம் கௌலவகரணம் கூடிய காலத்தில் சூரிய உதயம் முதல் 47 நாழிகை 45 வினடிக்கு மீனலக்னத்தில் துலாராசியில் ஸ்ரீ லோக ரட்சகரான சூரியபகவான் ரிஷப ராசியிலிருந்து மிதுனராசி சங்கிரமணமாக ஆனிமாதப் பிரவேசம் செய்தருளுகின்றார். ஆனிமீ 1உ சோமவாரம் ஷடசீதி புண்ணியகாலமாகும். அர்க்காதிபதி சந்திரனுகிறார். ஆனிமீ 7உ பானுவாரம் உதயாதி 48 நாழிகை 53 விநாடிக்குச் சூரியபகவான் திருவாதிரை நக்ஷத்திரத்தில் பிரவேசித்து மேகாதிபதியை ஏற்படுத்துகின்றார். மேகாதிபதி சந்திரனுகின்றார். இவ்வாறு சூரியபகவானுல் ஏற்படுத்தப்படுகின்ற அதிபதிகள் சந்திரனுகவே இருப்பதால் பிரஜைகளுக்கு வேண்டிய பொருள்கள் மிகுதியாக மலிந்து வரும். மக்கள் எல்லோரும் சுகவாழ்க்கை நடத்துவார்கள். உலகில் எல்லா இடங்களிலும் மழைபெய்து நவதானியங்களின் விளைவுக்கு வளம் ஏற்படும். சர்வேஸ்வரனின் அனுக்கிரகத்தினுல் தேசங்களில் தர்ம நீதிபரிபாலனம் நடைபெற்றுப் பிரஜைகள் இரட்சிக்கப்படுவார்கள். பிரஜைகள் எல்லோரும் நல்வினை புரிந்து ஆக்கம்பெறுவர். தேசத்தில் தொழிலகங்களில் ஊழியர்கள் ஆர்வத்துடன் உழைத்து, திரவியம் நிரம்பவடைந்து திருப்திகரமாகவும், சௌக்கியமாகவும் வாழ்வார்கள்.

உலகில் உள்ள திருமடங்கள் ஆசாரியபீடங்களில் ஞானசாரியர்களாகத் திகழ்கின்ற சிவஞான குருமகான்கள் சான்ருண்மையில் சிறப்புற்று விளங்க ஞானவழி நியமங்களும் நீதிநெறிமுறைகளும் போதித்தருளி அந்நியதி கைவல்யமாக மிளிரும் பொருட்டு ஆசீர்வாதம் செய்தருள்வார்கள். தேசங்

களில் எங்கும் தேவாலயங்களில் நித்தியம் ஆறுகால பூசைகள் விதிமுறைகளின்படி நடைபெற்றுக்கொண்டிருக்கும். எல்லா ஸ்தலங்களிலும் தேவஸ்தானங்களில் புண்ணியசீலர்களால் சிவபுண்ணிய தர்மங்களும் மூர்த்திகளுக்கு விசேஷ ஆராதனை யும் சிறப்புடன் நடைபெற்றுவரும். சிவாலயங்களில் பக்தர்கள் குழாம்கூடி இறைவனைத் தரிசித்து, பரமானந்தத்தில் ஆழ்வர். ஈஸ்வரகடாக்ஷத்தினல் மக்கள் எல்லோரும் தூயஉள்ளத்துடன் சீரிய வாழ்க்கை நடத்தி உயர்வார்கள்.

1. மேஷம் :- அசுவதி – பரணி – கார்த்திகை ¼

( சு. சே. சோ. லா. - லி. லு. லே. லோ. – அ. )

மேஷராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். பண வருமானம் மிடுக்கானதோரணைக்குத் தகுந்தபடி வலுவில் வந்துசேரும். கற்கள் பதித்த ஆபரண பிராப்தியையளிக்கும். பூமி இயந்திர சாதனங்களில் விருத்தி நிலைமையை உண்டு பண்ணும். வித்துவத்துவம் உத்தியோகம் இவற்றில் உயர்ந்த ஸ்திதி ஏற்படும். தார புத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். புத்திரபாக்கியம் ஒன்றும் ஏற்படும். ஜூன்மீ 20, 21, 22, 23, 27, 28, ஜூலைமீ 1, 2, 8, 9, 10, 11, 12, தேதிகளில் காரியஜயம் சந்துஷ்டி ஊக்கம் ஆகிய நற்பலன்களை உண்டு பண்ணும். ஜூன்மீ 15, 16, 17, ஜூலைமீ 13, 14, தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன்தரும்.

2. ரிஷபம் :- கார்த்திகை ¾ – உரோகிணி - மிருகசீர்ஷம் ½

( இ. ஊ. ஏ. – ஒ. வ, வி. வூ - வே. வோ. )

ரிஷபராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். பண வருமானங்கள் கணிசமாக வந்துகொண்டிருக்கும். முக்கியத்வ மான காரியங்களில் செலவும் ஆகும். ஜூலைமாதத்தில் எழுத்து மூலவிஷயங்களில் ஒப்பந்தங்களில் நல்லன ஏற்படும். நீர் இயந்திரசாதனங்களில் நல்ல பிரயோஜனம் தரும். தார புத்திரர் களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். ஜூன்மாதம் 15, 16, 17, 22, 23, 24, 25, 26, 29, 30, ஜூலைமீ 3, 4, 10, 11, 12, 13, 14, தேதிகளில் மிகுந்த நற்பலன் தரும். ஜூன்மீ 18, 19, ஜூலைமீ 15, இத்தேதிகள் சந்திராஷ்டமம். மற்றதேதிகளில் மத்திமபலன் தரும்.

3. மிதுனம் :- மிருகசீர்ஷம் ½ – திருவாதிரை – புனர்பூசம் ¾

( கா. கி. - கு. க. ங. ச்சா. – கே. கோ. ஹ. )

மிதுனராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். பண வருமானங்கள் வந்துகொண்டிருக்கும். அதற்கேற்ப, சுபச்

செலவும் ஆகும். புத்தி சாதுரியமாக எல்லாக் காரியங்களையும் நடத்தச் செய்யும். வீடு வாகனம் இவற்றில் மாத பிற்பகுதியில் நவீனமும் நல்ல செளகரிய நிலைமையும் ஏற்படுத்தும். தார புத்திரர்களின் செளக்கியம் நன்றாக இருந்துவரும். ஜூன்மீ 15, 16, 17, 18, 19, 25, 26, 27, 28 ஜூலைமீ 1, 2, 5, 6, 7, 13, 14, 15, இத்தேதிகளில் தனதாயாதி நற்பலன்களையளிக்கும். ஜூன்மீ 20, 21, தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

4. கடகம் :- புனர்பூசம் ¼ - பூசம் - ஆயில்யம்.

( ஹி. - ஹு. ஹே. ஹோ. ட. - டி. டு. டோ. )

கடகராசி 9 பாதங்களும் மிச்சிரபலனாக நடக்கும். பண வருமானம் மாதமுதலில் வெகுவாகவரும். வாசஸ்தலம் அரசாங்க காரியம் இவற்றில் மதிப்பான செலவினங்கள் ஏற்படும். தொழில் முன்னேற்றவகையில் விளம்பரமும் முதலீடும் ஆகும். மனோதைரிய போக்கில் எல்லாக்காரியங்களையும் நடத்திவரும். தாரபுத்திரர்களின் செளக்கியம் நன்றாக இருந்துவரும். ஜூன்மீ 18, 19, 20, 21, 27, 28, 29, 30 ஜூலைமீ 3, 4, 8, 9, 15 தேதிகளில் நற்பலன் ஏற்படும். ஜூன்மீ 22, 23 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

5. சிம்மம், - மகம் - பூரம் - உத்திரம் ¼

( ம. மி. மு. மே. - மோ. ட. டி. டு. - டே.

சிம்மராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். குடும்ப அபிவிருத்தியில் பண வருமானம் நல்லவிதத்தில் வந்துகொண்டிருக்கும். நெருக்கடியான நிலைமையில் சுப விசேஷ காரியங்களை ஏற்க நேரும். தீர்மானிக்கின்ற எல்லா விஷயங்களிலும் நல்ல நிலைமையை உருவாக்கும். தார புத்திரர்களுக்குச் செளக்கியபலன் தரும். ஜூன்மீ 20, 21, 22, 23, 29, 30 ஜூலைமீ 1, 2, 5, 6, 7, 10, 11 தேதிகளில் விசேஷமான பலனைத் தரும். ஜூன்மீ 25, 26 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

6. கன்னி :- உத்திரம் ¾ - ஹஸ்தம் - சித்திரை ½

( டோ. ப. பி. - பு. ஷ. ண. ட. - பே. போ. )

கன்னியாராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். பண வருமானம் நன்மதிப்பில் வந்துகொண்டிருக்கும். சகோதரர்களின் நலம் நன்றாக இருந்துவரும். வீடு வாகன பிராப்தியில் ஜூன்மீ 25 வக்கு நல்லன ஏற்படும். ஜீவனோபாயத்தொழிலில் ஜூலை மாதத்தில் ஓர் உயர்ந்த மாற்றம் ஏற்படும். முயற்சிக்

கின்ற எல்லாக்காரியங்களும் வெற்றிகரமாகநடக்கும். ஜூன்மீ 15, 16, 17, 22, 23, 24, 25, 26 ஜூலைமீ 1, 2, 3, 4, 8, 9, 13, 14 தேதிகளில் நன்மைகள் ஏற்படும். ஜூன் மீ 2 , 28 தேதிகள் சந்திராஷ்டமம். மற்றதேதிகளில் மத்திம பலன் தரும்.

7. துலாம் :– சித்திரை ½ – சுவாதி – விசாகம் ¾

( ர. ரி. – ரு. ரே. ரோ. தா. – தி. து. தே. )

துலாராசி 9 பாதங்களும் மிச்சிரபலனாக நடக்கும். பண வருமானம் நல்ல விதமாக வந்துகொண்டிருக்கும். அடிக்கடி அவசியச் செலவும் ஏற்படும். எழுத்துமூல விஷயங்களில் ஒப்பந்த லேவாதேவிகளில் நல்ல ஸ்திதியை ஏற்படுத்தித்தரும். தந்தைக்குப் பித்தாதிக்க நலிவு ஏற்பட்டுக்குணமாகும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்றாக இருந்துவரும். ஜூன்மீ 18, 19, 25, 26, 27, 28 ஜூலைமீ 3, 4, 5, 6, 7, 10, 11 தேதிகளில் தனதாயாதி நற்பலன்களையளிக்கும். ஜூன்மீ 29, 30 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

8. விருச்சிகம் :– விசாகம் ¼ – அனுஷம் – கேட்டை.

( தோ. – ந. நி. நு. நே. – ய. யி. யு. )

விருச்சிகராசி 9 பாதங்களும் மிச்சிர பலனாக நடக்கும். பண வருமானம் வெகுவாக வந்துகொண்டிருக்கும். சகோதரர் மிச்சிர பான்மையாக இருப்பினும் நல்ல ஸ்திதியில் விளங்குவர். வீடு வாகன பிராப்தி இயந்திரசாதனம் இவற்றில் நல்லன ஏற்படும். போக்குவரத்தில் ஓர் விபத்து ஏற்பட்டுத் தப்பும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்றாக இருந்துவரும். ஜூன்மீ 15, 16, 17, 20, 21, 27, 28, 29, 30 ஜூலைமீ 5, 6, 7, 8, 9, 13, 14 தேதிகளில் தனதாயாதி நற்பலன்களையளிக்கும். ஜூலைமீ 1, 2 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

9. தனுசு :– மூலம் – பூராடம் – உத்திராடம் ¼

( யே. யோ. பா. பி. – பு. த. ப. ட. – பே. )

தனுர்ராசி 9 பாதங்களும் மிச்சிர பலனாக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் பண வருமானம் சீராக இருப்பினும் கௌரவ ஸ்திதியை ஏற்படுத்திக்கொண்டிருக்கும். சகோதரர் பந்து மித்திரர்களின் அனுசரணை நற்பலன்தரும். வித்துவத்துவத்தில் மேன்மை ஸ்திதியை உண்டாக்கும். மாதப்பின்பகுதியில் பெற்றோர் சமானேருக்கு அரிஷ்டம் அல்லதுமனவருத்தசம்பவம் ஏற்படும். சனிஸ்வரனுக்குச் சகஸ்ரநாம அருச்சனை செய்தல் நலம். ஜூன்மீ 18, 19, 22, 23, 24, 29, 30 ஜூலைமீ 1, 2, 8, 9, 10,

11, 15 தேதிகளில் நற்பலன் அளிக்கும். ஜுலை 3, 4 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

10. மகரம் :- உத்திராடம் ¾ - திருவோணம் - அவிட்டம் ½
(போ. ஜ. ஜி. - கி. கு. கே. கோ. - கா. கி.)

மகரராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். பண வருமானம் பெருமதிப்பில் வந்துசேரும். சகோதரர்களின் நலம் நன்ருக இருந்துவரும். வித்துவத்துவத்தில் தவணை ஒப்பந்தங்களில் ஜுலை மாதத்தில் நன்மைகளுண்டாகும். ஆரோக்கியம் தரும். மாதமுதலில் புத்திரபாக்கியம் ஒன்று ஏற்படும். தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும். ஜுன்மீ 15, 16, 17, 20, 21, 25, 26 ஜுலைமீ 1, 2, 3, 4, 10, 11, 12, 13, 14 தேதிகளில் தனு தாயாதி நற்பலன்களையளிக்கும். ஜுலை மீ 5, 6, 7 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

11. கும்பம் :- அவிட்டம் ½ - சதயம் - பூரட்டாதி ¾
(கு. கே, - கோ. ஷ. ஸி. ஸு. - ஸே. ஸோ. தா.)

கும்பராசி 9 பாதங்களும் மிச்சிர பலனுக நடக்கும். குடும்பத்தில் பண வருமானம் சீராக வந்துகொண்டிருக்கும். சகோதரருக்கு நல்லன எற்படும். இதயவலி அஜீர்ணம் ஏற்படுதல் உடன் குணமாகுதல் ஆகும். ஞாயிற்றுக்கிழமை சூரியார்ச்சனை செய்தல் நலம். வித்தியா வியாபாராதி கலைத்துறைகளில் நன்மைகள் ஏற்பட்டுவரும். தார புத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். ஜுன்மீ 15, 16, 17, 18, 19, 22, 23, 27, 28 ஜுலை மீ 3, 4, 5, 6. 7, 13, 14 தேதிகளில் நற்பலன் தரும். ஜுலை 8, 9 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

12. மீனம் :- பூரட்டாதி ¼ - உத்திரட்டாதி - ரேவதி.
(தி. - து. ஸ. ச. த. - தே. தோ ச. சி.)

மீனராசி 9 பாதங்களும் மிச்சிர பலனுக நடக்கும். பண வருமானம் புத்தி சாதுரியத்தில் நல்ல வழியில் வந்துசேரும். எல்லாக் காரியங்களும் மனேதைரிய போக்கில் செயல்படும். வித்தியா வியாபாராதி கலைத்துறைகளில் மாதப் பின்பகுதியில் நல்லன ஏற்படும். நற்பாக்கியம் தரும். தார புத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். ஜுன்மீ 18, 19, 20. 21, 25, 26, 29, 30 ஜுலைமீ 5, , 7, 8, 9, 15 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களையளிக்கும். ஜுலைமீ 10, 11, 12 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

---

சிவமயம்

# ஆனிமாதச் சிறப்பு நாட்கள்

15—6—81 திங்கள், ஷடசீதிபுண்ணியகாலம், திருவையாறு மாதப் பிறப்பு தீர்த்தம்.

17 6—81 புதன், பௌர்ணமி பூஜை. விரதம். மாதபூஜையில் முப்பழம் சாத்துதல். காரைக்கால் மாங்கனி உற்சவ.

21—6 81 ஞாயிறு, வைத்தீசுவரன்கோயில் ஸ்ரீ வைத்தியநாதசுவாமி சம்வத்ஸராபிஷேகம். சங்கடஹரசதுர்த்தி.

22—6—81 திங்கள், திருப்பறியலூர் ஸ்ரீ வீரட்டேசுவர சுவாமிக்கும், திருக்குவளை ஸ்ரீ பிரமபுரீசுவரசுவாமிக்கும் சம்வத்ஸர அபிஷேகம்.

24—6—81 புதன், காளாஷ்டமி.

25—6—81 வியாழன், மாயூரம் ஸ்ரீ காசி விசுவநாதசுவாமிகோயில் ஸ்ரீ விசுவநாதசுவாமி சம்வத்ஸராபிஷேகம்.

26—6—81 வெள்ளி, ஏயர்கோன்கலிக்காம நாயனர் குருபூஜை.

28—6—81 ஞாயிறு, தருமபுரம் சண்முகர் கிருத்திகை அபிஷேகம். கிருத்திகை விரதம்.

29—6—81 திங்கள், வேளூர்க்கிருத்திகை. ஆனித்திருமஞ்சனஉற்சவ ஆரம்பம். பிரதோஷம்.

30—6—81 செவ்வாய், மாதசிவராத்திரி. கிருஷ்ணங்காரக சதுர்த்தசி.

1—7—81 புதன், சர்வ அமாவாசை.

4—7—81 சனி, திருவாரூர்த்திருக்கோயிலில் தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் மாத ஜன்மநக்ஷத்திர ஆயில்ய வழிபாடு.

5—7—81 ஞாயிறு, ஸ்ரீ மாணிக்கவாசகர் குருபூஜை, தருமையாதீனம் 19 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ மாணிக்கவாசக தேசிக சுவாமிகள் குருபூஜை. தருமையாதீனம் 23 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் குருபூஜை.

6—7—81 திங்கள், அமர்நீதி நாயனர் குருபூஜை.

7—7—81 செவ்வாய், ஆனித்திருமஞ்சனம். ஸ்ரீ நடராஜர் அபிஷேகம். திருக்கடவூர் காலசம்காரமூர்த்தி அபிஷேகம். மாயூரம் – வள்ளலார்கோயில் ஸ்ரீ வதான்யேசுவரசுவாமி சம்வத்ஸராபிஷேகம்.

8—7—81 புதன், தருமையாதீனம் 3 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சச்சிதானந்த தேசிக சுவாமிகள் குருபூஜை. உதயத்தில் ஸ்ரீ நடராஜர் தரிசனம்.

11—7—81 சனி, திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவர சுவாமி சம்வத்ஸராபிஷேகம்.

14—7—81 செவ்வாய், பிரதோஷம். திருக்கடவூர் ஸ்ரீமுனீசுவரபூஜை.

---

GNANASAMBANDAM Regd. No Tn / NM 2

உ
குருபாதம்

# தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி

தருமபுரம், மாயூரம் 609 001.

## முதுகலைப்பட்டவகுப்பு (எம். ஏ. தமிழ்) தொடக்கம்
## இளங்கலைப்பட்டவகுப்பு (பி. லிட்., தமிழ்)

# மாணவர் சேர்க்கை அறிவிப்பு

கடந்த 35 ஆண்டுகளில் ஆயிரக்கணக்கான தமிழ்இலக்கிய பட்டதாரிகளை உருவாக்கிய தருமையாதீனப் பல்கலைக் கல்லூரியில் 1981 - 82 ஆம் கல்வியாண்டில் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் அருளாதரவால் முதுகலை (எம். ஏ. தமிழ்) முதலாண்டு பட்டவகுப்புத் தொடங்க, சென்னைப் பல்கலைக் கழகம் அங்கீகாரம் அளித்துள்ளது. இளங்கலைப்பட்டம்பெற்ற வர்கள் (பி. ஏ., பி. எஸ்சி., பி. லிட்.,) முதுகலை முதலாண்டில் சேரத் தகுதியுடையவர்கள். பி. ஏ., தமிழ் (பிரிவு 12) மற்றும் பி. லிட்., (தமிழ்) பட்டம்பெற்றவர்களுக்கு முன்னுரிமை வழங்கப்பெறும்.

மற்றும் பி. லிட். பட்டம் மூன்றுண்டுப் பருவமுறை (ஆறு செமஸ்டர்) முதலாண்டு வகுப்பில் சேர, பள்ளி இறுதிவகுப்பில் (+ 2) தேர்ச்சிபெற்றவர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர். + 2 வகுப்பில் சிறப்புப்பாடமாக எதனைத் தேர்ந்தெடுத்திருப் பினும் அனைவரும் - ஆண் பெண் இருபாலரும் பி. லிட்., முதல் ஆண்டில் சேர்த்துக்கொள்ளப்பெறுவர். எம். ஏ., முதலாண்டில் சேர விரும்புவோர் ரூ 10 - 35ம், பி. லிட்., முதலாண்டில் சேர விரும்புவோர் ரூ 3 - 35 ம் 20—7—81 க்குள் பணவிடைவழி அனுப்பியோ அல்லது நேரில் செலுத்தியோ விண்ணப்பப் படிவம் பெற்றுக்கொள்ளலாம்.

த. ஆ. பல்கலைக்கல்லூரி
தருமபுரம், மாயூரம் 609001

முதல்வர்.

Printed & Published by V. Ramaiah Pillai, Manager, Dharmapuram
at the Gnanasambandam Press Dharmapuram, Mayuram. 10-6-81